# தமிழ் நண்பர்கள்

தமிழும் தமிழ் சார்ந்த நண்பர்களும்

## மின் இதழ்

ஐப்பசி மாதம்
விஜய வருடம்

மின் இதழை பதிவுகள் எழுதி
அலங்கரித்த அனைத்து தமிழ்
நண்பர்களுக்கும்
நன்றி... நன்றி... நன்றி...

tamilnanbargal.com

# இம் மின் இதழில் ...

### *நண்பர்களுக்கு வணக்கம்!*

*நம் தளத்தில் ஆர்வமுடன் பங்கேற்கும் அனைவருக்கும் நன்றிகள். இம்மின் இதழ் மூகமாக அனைவரையும் சந்திப்பதில் மகிழ்வு அடைகிறோம்.*

*தமிழ் நண்பர்கள் இணைய தளத்தில் ஒவ்வொரு மாதமும் வெளிவரும் நண்பர்களது படைப்புகளில் சிறந்த பதிவுகளை ஒன்று சேர்த்து ஒரே மின் நூலாக வெளியிட்டு வருகிறோம்.*

*பதிவுகளில் இருக்கும் எழுத்துப்பிழைகளையும் கருத்துப்பிழைகளையும் மின் நூலில் இருக்கும் பிழைகளையும் பொறுத்துக்கொள்ள வேண்டுகிறோம்.*

*"இம் மின் நூல் தமிழ் பேசும் நண்பர்களுக்கு சமர்ப்பணம்."*



## *விவாதமன்றம்*

### சந்தேகமா? அளவு கடந்த அன்பா? சுயநலமா?

வணக்கம் நண்பர்களே,

ஒருவருடன் ஒருவர் கொள்ளும் அன்பை தெளிவாக வகைப்படுத்திவிட முடியாதென்றாலும் உலகலவில் அன்பானது அன்பு, பாசம், நட்பு, காதல் என்று அறியப்படுகிறது. இவ்வகை அன்பிற்குள் நம்முடன் பழகும் ஒருவர் வேறு நபருடன் பழகும் போது அவர் நம்மை விட்டு விலகுவதாக ஏற்படும் ஒருவித கவலை வருவது சகஜமாக இருக்கிறது. இது எவ்வகை அன்பிலும் வருகிறது.

இதன் மூல காரணம் எது என நினைக்கிறீர்கள்?

மருமகள் தன் மகனை தன்னிடம் இருந்து பிரித்துவிடுவாலோ என்று பயப்படும் ஒரு மாமியாரிடம் காணப்படும் குணம் எனதால் வருகிறது அது அளவு கடந்த அன்பா அல்லது சுயநலமா?

காதல் துணை வேறு நபருடன் சாதாரணமாகவே பழகினாலும் அதை ஏற்க இயலாமல் இருப்பதற்கு காரணம் சந்தேகமா? அல்லது நம்பிக்கை இன்மையா அல்லது அளவு கடந்த அன்பா?

நம்பிக்கை இருப்பின் பயம் வராது சந்தேகமும் வராது. ஆனால் அன்பில்லாமல் இருந்தாலும் இதை பெரிதாக எடுத்துக்கொள்ளமாட்டார்கள்.

அன்பில் சுயநலமும் சந்தேகமும் சார்வசாதாரணம் தானா?

நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

நீங்களும் விவாதிக்கலாம். முகவரி http://tamilnanbargal.com/node/53870

## *கவிதை பட்டறை*

*எங்கள் தமிழாசிரியர் என்று நினைக்கும் போது உங்களுக்குள் எழும் கருத்துகளை கவிதையாக வடியுங்கள்.*

*இக்கவிதை ஒவ்வொருவரின் தமிழாசியர்களுக்கும் சமர்ப்பணம்.*

*எழுதி தளத்தில் பதிந்துவிட்டு அதன் முகவரியை* http://tamilnanbargal.com/node/54301 *பக்கத்தில் கருத்தாக பதியுங்கள்*

## *கதை பட்டறை*

*கோபன் நட்புக்கு முக்கியத்துவம் கொடுப்பவன். அவனது நண்பர்களுக்கு தன்வீட்டில் முழு சுதந்திரம் கொடுத்து வைத்திருக்கிறான். தன் வீட்டில் தன்னைப்போல மரியாதையை வீட்டார்கள் கொடுக்க வேண்டும் என நினைப்பவன். ஆனால் வீட்டாளர்களுக்கு அதில் விருப்பமில்லை. இவ்வாறு எல்லா நண்பர்களையும் நம்பிவிடக்கூடாது உனக்கு ஒரு தங்கை இருக்கிறாள் என அறிவுரை செய்வதால் அடிக்கடி வீட்டில் சண்டை வரும். கோபித்துக்கொண்டு ஏதாவது நண்பன் வீட்டுக்கு போய்விடுவான்.*

*ஆனால் ஒரு சமயம் வீட்டார் எதிர்பார்த்தபடியே கோபனது தங்கையிடம் தகாதமுறையில் பேசிய ஒரு நண்பனைப்பற்றி கோபனுக்கு தெரியவருகிறது. அப்போது என்ன முடிவெடுத்து செயல்படுகிறான் என்பதே கரு. இதை விரிவுபடுத்தி எழுதுங்கள்.*

*எழுதி தளத்தில் பதிந்துவிட்டு அதன் முகவரியை* http://tamilnanbargal.com/node/54300 *பக்கத்தில் கருத்தாக பதியுங்கள்*



# செந்தமிழ்ச் செம்மொழி, எம்மொழியாம்!!!

Sundar_Purushothaman

*குமிழ்கலசம் விரிக்கலயம் எல்லாமும் தேடி,
அமிழ்தெங்கே...அமிழ்தெங்கே...வினவுகின்றீர் -
எங்கள்
'தமிழெ'ன்ற சொல்லொன்றே அமிழ்து காண்பீர்!*

*இரண்டாறுயிரும்,
மூன்றாறு மெய்யும்,
உடன்கூடி உருவான சதமிரண்டும்,
தசமோடாறும், ஆயுதமொன்றுமாய்
ஆதியிலுதித்த அருமை மொழி - எங்கள்
செந்தமிழுணர்வீரே!!*

*சந்தையில் வாங்கும் சரக்கல்ல - இதன்
விந்தையுரைப்பேன் சிந்தையில் கொள்வீர்!
எந்தை ஈசனின் நுதல்விழித் தீப்பொறியில்,
பொய்கைக் கஞ்சத்தின் மேலுதித்த
எழில்கொஞ்சும் குகனெங்கள்
தமிழுக்குத் தலைவன்!*

*குமிழ்மேகம் முகம்மோதும்,
பொதிகைமடி வரமேகும்,
முதிர் ஞானக் குறுமூர்த்தக் குருசீலன்,
தமிழுக்குத் துணைவன்!*

*வரிவண்டு நடமாடும்
நறுங்கூந்தல் அசைந்தாட,
கருங்கண்டன் மனையாள்
கயல்விழியாள்நகர் திரிசங்கவேந்தர் - நற்
தமிழ்ச் சேவகராமே!*

*இலக்கியங்கள் இதில் நயமுடன் தோன்றின - நல்
இலக்கணங்கள் நறுமலரெனச் சொரிந்தன
பல்சுவைப் பதிகம் பதமாய் மிளிர்ந்தன
பண்பினை வளர்த்ததென் பழந்தமிழ் மொழியே!*

*தொல்காப்பியமென் தமிழினை உரைத்தது
கணக்கு நூல்கள் நல்லறம் தந்தன
நீதி நூல்கள் வாழ்தலைச் செப்பின
காப்பியங்கள் கனிந்ததை விளக்கின*

*திருமுறை பிரபந்தம் தெய்வம் போற்றின
சாத்திரமெல்லாம் சத்தியம் நவின்றன
வள்ளுவராதி வல்லுனரெல்லாம்
வாழ்வின் வழியதை வலிந்து நவின்றனர்!*

*பொன்பொருளெல்லாம் புறத்தே போக
பொலிவுற்றிலங்கும் செந்தமிழ் மொழியை
வந்தனம் கூறி வாய்வழியுரைப்பீர்
உணர்வீர் அதுவே நல்லதோர் அமுதாம்!*

# காதல் வெற்றி

சீர்காழி.சேதுசபா



### 4. காதலின் உறுதி

அழகிகளின் இளவரசி!
தேவதைகளின் ராணி!
பூக்களின் அரசி!
அற்புதங்களின் பேரரசி!

அதிசயமாய் வந்ததோ
அருகில் நின்றதோ
அன்பாய் சிரித்ததோ
ஆசையாய் தொட்டதோ

உணர்வு சிலிர்க்க
நெஞ்சம் துடிக்க
கண்டேன் கண்டேன்
காவியப் பேரழகை!

மார்பு தடதடக்க
மனது படபடக்க
உண்டேன் உண்டேன்
ஓவியப் பேரெழிலை!

நெஞ்சங்கள் அருகருகே
நினைவுகளின் நீந்தலிலே!
காதலர்கள் நாம்
கவிதையாகிக் கிடந்தோம்!

தேக்கிவைத்த அன்பினையே
தெவிட்டாது உண்டோம்!
தேனின்பப் பேச்சினிலே
தினக்களெல்லாம் மகிழ்ந்தோம்!

வருவது வரட்டும்
வந்துவிடு என்னுடன்
வாய்வரை வந்தவார்த்தைகள்
வருவதற்குக் காத்திருந்தது!

வாழ்வின் இறுதிவரை
வந்திடுவேன் உன்னோடு
வாஞ்சையோடு சொன்னாய்
வானம் வசப்பட்டது!

பகைவந்தாலும் சிறையிட்டாலும்
உனைவிடமாட்டேன்!
எதுவந்தாலும் எவர்தடுத்தாலும்
உனைபிரியமாட்டேன்!

எப்படி மறப்பேன்
காந்தக் கண்களை!
எப்படி மறுப்பேன்
கனிவுக் குணங்களை!






### 5. காதலின்பம்

வஞ்சகன் வந்தான்
வஞ்சனை செய்தான்
விலங்கிட்டு பூட்டினான்
விதிவசமானோம்!

விலங்கறுக்க நேரம் வந்தது
விதி முடிவுக்கு வந்தது
வஞ்சம் தடுத்து வீழ்த்தப்பட்டது
வாழ்வில் வசந்தம் தொடங்கியது!

நண்பர்களைக் காத்து
நயவஞ்சகம் உடைத்து
நீதியை நிலைப்படுத்தி
நேர்மையாய் நடந்தோம்!

எங்கேயோ ஒருசந்திப்பு
எப்போதோ ஒருபார்வை
தொட்டுக்கொண்டோமில்லை
பலவருட நிகழ்வுகளில்!

எங்கேயும் சேர்ந்திருப்பு
எப்போதும் பார்வையிலே
சுகநினைவுகள் நனைக்கும்
நடந்திடும் நிகழ்வுகளில்!

அன்பான உணர்வுகள்
அணுவிலும் நுழையும்
அன்பான இதயம்
அற்புதங்கள் நிகழ்த்தும்!

தந்தையும் தமையனும்
ஊரும் உறவும்
சுற்றாரும் உற்றாரும்
சேர்ந்திருந்து சிறப்பிக்கும்

நல்லதோர் நாளில்
நல்லோர்களின் முன்னிலையில்
நன்மைதரும் நல்வாக்குகளில்
நாம் இணைந்தோம்!

நல்லவை நிகழ்ந்திடவே
நிம்மதி பெருகிடவே
நன்மைகள் நிலைத்திடவே
நாடே மகிழ்ந்திடவே

பார்ப்போர் வியந்திடவே
பெருமைகள் கூடிடவே
பிறப்பு சிறந்திடவே
பேரானந்தமாய்
வாழ்ந்திடுவோம்!




--- நிறைந்தது ---





# கருவாச்சி காதல்

சுதா

அத்த பெத்த ராசாவே
ஜல்லிக்கட்டு காளனாலும்
மல்லுக் கட்டி ஜெயிக்கும்
வெட்டருவா மீச வீரனே !!!

அறியா வயசுல

நாவப் பழம் பறிக்கையில
நாடிக்குள்ள வந்தவனே
கண்ணாமூச்சு ஆடுறப்ப
கனவுல நுழஞ்சவனே !!!

பருவவயசுல

சந்தைக்கி போனவள
சாடையில பேசி சாச்சவனே
பல்லாங்குழி ஆடயிலே
பாவி மனச பறித்தவனே !!!

ஒளிஞ்சி விளையாடையிலே
உசுரை திருடி போனவனே
வாய்க்கா வரப்பு சேத்துல
எனைத் தள்ளி கொன்னவனே !!!

அத்தை மவனு

ஒத்தையா போனவள
வழி மறிச்சி
முத்தமொன்னு கேட்டவனே !!!

ஆடு மேய்க்க போனவள
பாதியில விட்டிட்டு
படிக்கதா பட்டணம் போனவனே !!!

செங்காத்து வீசுதடா
செவி சாச்சு கொஞ்சம்
என் சோகத்த கேளுடா !!!

உன்னோட நெனப்பால
நெஞ்சங் கூடு வேகுதடா
பொச கெட்ட சிறுக்கி
எனக்கு கிறுக்குதான் புடிக்குதடா !!!

வருசங்க தேஞ்சாலும் நெஞ்சுல
உன் நெனப்பு தேயலடா
அத பத்திரமா முடிஞ்சுதா
வைச்சிருக்கேன் முந்தானில !!

தோட்டம் தொரவெல்லாம்
உன் வாசம் வீசுதடா
உன் கடுதாசி காணாம
கண்ணு ரெண்டும் கலங்குதடா !!!

தென்ன தோப்பு கிளியும்
உன் பேரை சொல்லுதடா
மாந்தோப்பு மைனாவும்
உன்ன பத்தி பாடுதடா !!

மச்சானே

உன் கம்மம் காட்டு
முத்தமும் காயலடா
நீ வாங்கி கொடுத்த
மல்லியும் வாடலடா !!!

மாமானே

நீயில்லாம கருவாச்சி
நானோ வெறுங்கட்டையடா
உன் மாருல சாயாம
இந்த கட்ட சாகதடா !!!

தாரமாக்க தாலியோட
நீ வருவனு நான்
உசுரோட உசுரு சேத்து
உன் கூட வாழறேன்டா!!!

எங்கப்பனும் வரன பாக்குராரு
உனக்கு வாக்கப்பட நெனச்சவளுக்கு
வாய்க்கரிசி போடதா போராரு !!!

தனி மரமா நிக்குறேன்டா
சேதி சொல்ல ஆளுமில்ல
நீயோ பட்டணத்து மங்கையோட
வந்து இறங்கிடாதடா !!!

பாழாப்போன என் மனசு தாங்காது
அரளியை அரச்சி குடிச்சு
பாடையில போய்டுவேண்டா !!!

# சாம்ராட் சம்யுக்தன்

Sivaji dhasan

*பாகம் 2 – 10. சாவின் பிடியில் சம்யுக்தன்*




**கா**லை இளந்தென்றல் சில்லென்று வீசினாலும் அது மனதிற்கு குளிர்ச்சி தராமல் இருப்பதாகத் தோன்றியது சம்யுக்தனுக்கு. அன்று ஒரு காரியம் முடிக்க வேண்டிய கட்டாயத்தில் அவன் மனது துடித்துக்கொண்டிருந்தது. தான் இதுநாள் வரை பராமரித்து வந்திருந்த யானைக்குக் கரும்புக் கட்டை வைத்துவிட்டு அதன் அருகிலேயே வெறுமையோடு உட்கார்ந்திருந்தான்.

ஒரு சிறிய மலைக்குன்று போல கருநிற யானை, கரும்பை சுவை பார்த்துக்கொண்டே சம்யுக்தனைப் பார்த்துக்கொண்டிருந்தது. சிறிது காலமே அதனைப் பராமரித்திருந்தாலும் அந்தக் களிறு சம்யுக்தனின் அன்பு மழையில் நனைந்தபடி சந்தோசமாக இருந்தது. நாகவனத்தில் அந்த யானையைக் கண்டாலே எல்லோரும் நடுங்கும் அளவிற்கு பெயர் கொண்டது. மக்கள் அதற்கு வைத்த பெயர் மத யானை. திடீர் திடீரென்று மதம் பிடிக்கும்; பாகனையே தூக்கி வீசும்; எதிர்பட்டவர்களை துதிக்கையால் பிடித்து சுழற்றி நெற்கதிர் போல் தரையில் அடிக்கும்; பல பேரின் உயிரைக் குடித்த யானை அது. அந்த யானைக்குப் பாகனாகப் போக எல்லோரும் பயந்த சமயத்தில் சம்யுக்தன் தைரியமாகச் சென்றான்.

கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையும் என்ற பழமொழிக்கு ஏற்ப சம்யுக்தன் அதன் மேல் அன்பாக நடந்துகொண்டான். தினமும் உணவைத் தன் கையால் உருண்டை பிடித்து அதற்கு ஊட்டுவதும் ஆற்றங்கரைக்குச் சென்று குளிப்பாட்டிவிடுவதும் பாதி நேரம் அதன் கூடவே இருப்பதுமாக இருந்த அவனின் கருணை உள்ளத்திற்குக் கட்டுப்பட்டது மத யானை. சிறு பிள்ளை போல மத யானை அவன் பின்னே வீதியில் நடந்து செல்வதைப் பார்த்து ஊரே ஆச்சர்யப்பட்டு வாயடைத்து நின்றது.

நடப்பவை கனவாகத் தோன்றியது சம்யுக்தனுக்கு. நீண்ட பெருமூச்சை வெளியேற்றி, எழுந்து நின்று யானையின் அருகே சென்றான். தனது தும்பிக்கையால் அவனது முகத்தை வருடியது களிறு. அதைப் பிடித்து வெள்ளை நிற கூரிய வேல்களாக இருந்த அதனுடைய தந்தத்தைத் தடவிப்பார்த்தான். பின்னர், யானையின் மீது ஏறி உட்கார்ந்து இரு கைகளாலும் முடிந்தவரை யானையை அணைத்துத் தலைமாட்டில் ஒரு முத்தத்தைக் கொடுத்தான். அதில் பிரியப்போகும் ஏக்கம் வலியோடு பதிந்தது. பின்னர், கலங்கிய கண்களோடு யானை மீதிருந்து இறங்கி அங்கிருந்து நகன்றான். தன் எஜமானன் இன்று வித்யாசமாக நடந்துகொள்கிறானே என்று எண்ணிய யானை, கரும்பைச் சுவைப்பதை நிறுத்திவிட்டு அவனையே பார்த்துக்கொண்டிருந்தது.

அரண்மனை வாசலில் மன்னர் மார்த்தாண்டன் கோவிலுக்குச் செல்வதற்கான பணிகள் ஆயத்தமாகிக்கொண்டிருந்தன. அவற்றின் சலசலப்புகள் சம்யுக்தன் காதுகளில் விழத் தவறவில்லை.

⋆ ⋆ ⋆

நூற்றுக்கணக்கான வீரர்கள் கையில் வேலோடு முன்னே செல்ல அதற்கடுத்து சில நூறு குதிரைவீரர்கள் கடல் அலையாய் வந்தனர். நடுவே தங்கத்தாலான ரதம் கதிரவனின் காலை இளம்சூட்டில் இன்னும் மெருகேறி ஜொலித்தது. அதை, சுமார் பத்து குதிரைகள் போராடியபடி இழுத்துச் சென்றன. ரதத்திற்குக் காவலாக முன்னேயும் பின்னேயும் குதிரை வீரர்கள் சென்றனர்.

இவற்றையெல்லாம் காண மக்கள் பெருவெள்ளம் வீதியின் ஓரத்தில் நின்றபடி வேடிக்கை பார்த்தது. வெள்ளிக்கிழமை தோறும் இது போன்ற காட்சியை மக்கள் காண்பர். நாட்டின் நடுவில் அம்மனுக்காக எழுப்பப்பட்டிருக்கும் கோவிலுக்கு வெள்ளிக்கிழமை காலையில் சென்று பூஜை செய்வதை வழக்கமாகக் கொண்டவர் மார்த்தாண்டன். அம்மன் மேல் இருக்கும் அலாதி பக்தியால் மாபெரும் கோவிலையெழுப்பி விசேஷ பூஜைகளை நடத்துபவர். என்ன தான் கொடிய மனம் கொண்டவராக இருந்தாலும், மார்த்தாண்டன் சில விஷயங்களில் நல்லவர் என்றே கூறலாம். தெய்வ வழிபாடு; பெண்களின் மேல் நாட்டம் கொள்ளாத மனம்; வீதிக்கொரு கோவிலை எழுப்பி மக்களுக்குத் தெய்வ நம்பிக்கையை ஊட்டுதல் எல்லாம் அவரது நற்குணங்கள்.

எப்பொழுதும் அம்மன் கோவிலுக்குச் செல்வதென்றால் பக்தியோடும் நிம்மதியோடும் செல்லும் மன்னர் இன்னும் ஏனோ மனதிற்கு ஒவ்வாமையாக உணர்ந்தார். காரணம் தெரியாமல் தவித்தார்; பட்டுத் திரையை விலக்கி மக்களின் முகத்தைப் பார்த்தார்; எல்லோர் கண்களிலும் ஒருவித பயம் சூழ்ந்திருந்தது; லேசான புன்முறுவலை உதிர்த்து சிந்தனையில் குடிபுகுந்தார்.

இரண்டு நாழிகைகளில் ரதம் கோவிலையடைந்தது. மார்த்தாண்டன், கனவிலிருந்து விழித்தவர் போல் கீழே

இறங்கினார். ரதத்தின் படியில் அவரது கால் இடறி தரையில் விழப் பார்த்தார். அருகிலிருந்த காவலன் அவரைத் தாங்கிக்கொண்டான். என்ன இது துர்சகுனமாக நடக்கிறதே ! என்றெண்ணி தன்னைச் சுற்றிக் குழுமி இருக்கும் வீரர்களின் முகத்தை ஆராய்ந்தபடி நோக்கிச் சலிப்போடு கோவில் வாசலில் கால் வைக்கும் முன் ஒரு குதிரை கனைக்கும் ஒலி கேட்டு தலையைத் திருப்பிப் பார்த்தார்.

முண்டாசுத் துணியால் முகத்தை மறைத்தபடி வேலை ஏந்திக்கொண்டு குதிரையின் மேல் அமர்ந்திருந்த ஒருவன், மன்னரை நோக்கிக் குறிபார்த்து அந்த வேலை எறிந்தான். காற்றையும் வீரர்களையும் கடந்து விர்ரென்று சீறிக் கிளம்பியது கூரான வேல். அதைச் சற்றும் எதிர்பாராத மார்த்தாண்டன் கணப் பொழுதில் தப்பிக்க எண்ணினார்.

*நில் கவனி செல் ..*
*சாலைவிதிகளை மட்டும் அல்ல*
*சாலையோரத்தில் உன்க்காக காத்துக்கிடக்கும்*
*என்னையும் பார்த்து விட்டு செல்லடி.....*

*தமிழரசி*

அவர் ஓடவில்லை; ஒதுங்கவில்லை; நின்றபடியே தன்னை நோக்கி வரும் வேலுக்காகக் காத்திருப்பது போல் கோவைப் பழமாகச் சிவந்த கண்களின் வழியே பாய்ந்து வரும் வேலை சுட்டெரிக்கும் சூரியனாய்ப் பார்த்தார். அவரின் நெற்றிப் பொட்டில் பாய்வதற்கு வந்த வேலை தன் கைகளால் நொடிப்பொழுதில் பிடித்து நிறுத்தினார். கூட்டத்தினர் பயமூச்சை வெளியேற்றினர். தன் நெற்றிப்பொட்டில் திலகமிட்டதைப் போல் கீறிய வேலின் முனையை ஒரு முறை நோக்கிவிட்டு அந்த வேலை எறிந்தவனை சினம்கொண்ட வேங்கையாக நோக்கினார்.

வேலை எறிந்தவன் குதிரையின் மீது லாவகமாக நின்றுகொண்டு சுடும் விழிகளோடு மன்னரை நோக்கினான். அப்பார்வையில் மன்னரே லேசாகக் கதிகலங்கிப் போனார். அவரையும் அறியாமல் அவரது உதடுகள் "சம்யுக்தன்..." என்று முணுமுணுத்தன.

வேலை எறிந்த சம்யுக்தன் குதிரையை வேகமாகச் செலுத்தினான். அவனை நாகவன வீரர்கள் துரத்திச் சென்றனர். மன்னரும் ஒரு குதிரையின் மீதேறி அவனை வெறிகொண்டு துரத்தினார். அவன் வீசி எறிந்த வேலை கையில் சுமந்தபடி வேகமாகக் குதிரையைச் செலுத்தினார்.

⋆ ⋆ ⋆

சம்யுக்தன் நெடுநேரமாக வராததால் தன் எஜமானனுக்கு என்ன ஆனதோ என்று நினைத்த சம்யுக்தன் பராமரித்த யானைக்கு மதம் பிடித்துக்கொண்டது. பூமி அதிர மலையே ஓடி வருவதைப் போல வீதியில் ஓடி வந்தது. மக்கள் அனைவரும் பயந்து ஓடி ஒதுங்கினர். மீறி எதிரே வந்தவரையெல்லாம் தூக்கி வீசியபடி முரட்டுப் பிளிறலோடு வலம் வந்தது. அதை அடக்க, பாகர்கள் பின்னே ஓடினர். ஆயினும், யானையை நெருங்க முடியவில்லை. வாசலில் தீட்டிய மாக்கோலத்தை எல்லாம் கலைத்து மண்ணை வாரி தன் மேலேயே தூறி அங்கும் இங்கும் ஓடியது. குடிசை வீடுகளை அடித்து நொறுக்கியது. வாழைத் தோட்டத்திற்குள் புகுந்து நிலங்களை நாசப்படுத்தியபடி சம்யுக்தனைத் தேடி ஓடியது.

மற்ற யானைப் பாகர்கள் அங்குசத்தைச் சுமந்தபடி செய்வதறியாது யானையின் பின்னே ஓடிக்கொண்டிருந்தனர். அவ்வப்போது யானை நின்று பாகர்களைத் துரத்தியது. பாகர்கள் நாலா புறமும் ஓடி தப்பிக்கப் போராடினர். வாழை மரங்களை மிதித்து நாசம் செய்தபடி ஓடிய யானையின் கண்கள் ஒருவனை நூறு பேர் துரத்துவதைக் கண்டது. யானையின் அபார ஆற்றல், முகத்தை மறைத்திருந்தவன் தான் தன் எஜமானன் என்று யூகித்துக்கொண்டது.

யானைக்கு ஒரு குணாதிசயம் உண்டு. தன் எஜமானரை யாராவது தாக்கினாலோ அல்லது தனக்கு முன்னால் தன் எஜமானரின் பேச்சைக் கேட்காமல் முரண்டு பிடித்தாலோ, அவர்களைத் தாக்கிக் கொன்றுவிடும். தன் எஜமானருக்கு ஆபத்து என்று தெரிந்துகொண்ட யானை துரத்துபவர்களை எச்சரிக்க துதிக்கையை உயரத் தூக்கி ஒரு பிளிறலை வெளியிட்டது. அதில், தன் எஜமானரைத் துரத்தாதீர்கள் என்ற பொருள் ஒளிந்திருந்தது. சம்யுக்தனைப் பிடிக்கும் நோக்கத்தில் ஓடிக்கொண்டிருந்த வீரர்களின் காதுகளில் யானையின் எச்சரிக்கை மணி ஒலிக்கவில்லை. இதனால் ஆத்திரமுற்ற யானை அவர்களை நோக்கி ஓடியது.

மார்த்தாண்டனின் சிவந்த விழிகளில் பொங்கி வழிந்த அனல் தேகமெங்கும் பரவி கொழுந்துவிட்டெரிந்தது. ஒரு சிறு பயலின் தாக்குதலுக்கு சிறு தடுமாற்றத்தை அடைந்ததை எண்ணி அவருக்கே அவர் மீது ஆத்திரம் மூண்டது. இது வரை தன்னை நேருக்கு நேராக எதிர்த்தவர்களை அவ்விடத்திலேயே கொன்று அவர்களின் குருதியில் அபிஷேகம் நடத்திவந்த மார்த்தாண்டனின் உள்ளத்தை நடுங்கச் செய்த அவனை இரண்டு கூறாகப் பிளக்க வேண்டும் என்று எண்ணியபடியே எல்லா வீரர்களையும் முந்திக்கொண்டு சம்யுக்தனைத் துரத்தினார்.

அதற்குள் யானை அங்கே வந்து தடையை உருவாக்கியது. யானை, கூட்டத்தில் நுழைந்தவுடன் குதிரைகள் பயந்து முரண்டு பிடித்து சிதறியோடின. சில குதிரைகள் சறுக்கி விழுந்தன. பின்னே வந்த குதிரைகளும் சறுக்கல்களைச் சந்தித்தன. கீழே விழுந்த வீரர்களின் உடலைக் குத்திக் கிழித்தன யானையின் தந்தங்கள். பயந்த வீரர்கள் யானையிடம் இருந்து தப்பிக்க ஓடினர். ஒவ்வொருவரையும் தூக்கி வீசி மார்த்தாண்டனைத் துரத்தியது யானை.

குதிரையில் சென்றுகொண்டிருந்த சம்யுக்தன் தன் பின்னே வந்துகொண்டிருந்த மார்த்தாண்டனையும் அவன் பின்னே துரத்தி வந்துகொண்டிருந்த யானையையும் நோக்கினான். தன் உயிரைக் காப்பாற்ற யானை வருவதைக் கண்டு அவன் கண்களில் லேசாகக் கண்ணீர்

ஊற்று முளைத்தது. இருந்தும், வேகத்தைக் குறைக்காமல் அருவியை நோக்கிக் குதிரையைத் திருப்பினான். குதிரையின் கால்களில் வலி ஏற்பட்ட போதும், அது நிலைமையை உணர்ந்துகொண்டு கற்களையும் முட்புதர்களையும் தாண்டியபடி சென்றது.

யானையால் குதிரைகளின் வேகத்திற்கு ஈடு கொடுக்கமுடியவில்லை. சிறிது நேரத்தில் பாகர்கள் யானையைச் சூழ்ந்து அங்குசத்தால் அதை அடக்கப் போராடினர். யானையும் களைப்படைந்ததால் அவர்களுக்குப் பணியவேண்டியதாயிற்று. இருந்தும், 'எஜமானனை விட்டு விடு..எஜமானனை விட்டு விடு' என்பது போன்ற பிளிறலின் ஒலி நாற்புறங்களிலும் ஒலித்தது.

மலையில் இருந்து ஒரு நீண்ட அருவி கீழே குதித்து எங்கோ சென்று மறைந்துகொண்டிருந்தது. அருவி கீழே விழும் ஓசை, கடல் அலைகளின் ஓசைக்கு இணையாக இருந்தது. அவ்வோசையோடு குதிரையின் குளம்பொலியும் கலந்துகொண்டது. சம்யுக்தனின் குதிரைக்கும் மார்த்தாண்டன் செலுத்திய குதிரைக்கும் இடைவெளி குறுகிக்கொண்டே சென்றது. சம்யுக்தனின் குதிரை களைப்படைந்து வேகத்தைக் குறைத்தது.

அது தான் சரியான சமயம் என்று தெரிந்துகொண்ட மார்த்தாண்டன், சம்யுக்தன் தன் மேல் எறிந்த வேலை அவன் மீது எறிந்தார். வேல், கண்ணிமைக்கும் நேரத்தில் சம்யுக்தனின் பின்னந்தோளில் பாய்ந்து பிளந்தது. சம்யுக்தன் வலி பொறுக்கமுடியாமல் "ஆஆ..." என்று அலறினான். தன்னுடைய குறி தப்பவில்லை என்ற பெருமை மார்த்தாண்டனின் முகத்தில் புன்னகையாக அரும்பி ஒரு எதிர்பார்ப்பு முளைத்தது. சம்யுக்தனின் முகத்தைப் பார்த்துவிடவேண்டும் என்ற ஆவல் தான் அதற்குக் காரணம். சம்யுக்தனைப் பிடிக்க குதிரையின் வேகத்தை அதிகப்படுத்தினார். அதற்குள் சம்யுக்தன் மலையின் மீதிருந்து குதித்துவிட்டான்; கீழே விழுந்து ஓடிக்கொண்டிருந்த அருவியில் கலந்துவிட்டான்.

சிறு ஏமாற்றத்தோடு குதிரையிலிருந்து கீழிறங்கிய மார்த்தாண்டன், சம்யுக்தன் விழுந்த இடத்தை மலை உச்சியிலிருந்து கீழே பார்த்தார். நதியின் ஓரத்தில் சம்யுக்தன் சடலமாக கிடந்தான். அவனது முகம் நீரினுள் புதைந்திருந்தது. அருவி ஓஓ..வென்று கதறி அழுவதைப் போல் விழுந்ததை மார்த்தாண்டன் கவனிக்கவில்லை. சில மணித் துளிகளில் நாகவன வீரர்கள் மன்னரை நோக்கி வந்து நின்றனர். கீழே இருந்த உடலை நோக்கிவிட்டு, 'இறந்துவிட்டான்..' என்று தங்களுக்குள் பேசிக்கொண்டனர்.

அவர்கள் பேசும் சொற்கள் மார்த்தாண்டனின் காதுகளுக்குள் தேனாகப் பாய்ந்தன. எதிர்த்த எதிரியைத் தீர்த்துவிட்டோம் என்ற பெருமிதத்தில் அவர் மனது ஆனந்தம் அடைந்தது. இருந்தும், சம்யுக்தன் இறந்திருப்பானா என்ற உறுதியான நம்பிக்கைக்கு மார்த்தாண்டன் வரவில்லை. அவரது நினைவு முழுவதும் சம்யுக்தனின் முகத்தைப் பார்க்கவில்லையே என்பதிலேயே இருந்தது.

உடனே, தன் வீரர்களிடம் கீழே கிடக்கும் உடலை எடுத்து வருமாறு கட்டளையிட்டான். வீரர்கள் சற்று தயக்கம் காட்டினர். காரணம், ஆபத்தான மலைப்பகுதியது. சற்று நிதானம் தவறினால் கூட மரணம் அணைத்துக்கொள்ளும். அவர்களின் தயக்கத்தைக் கண்டு கொதித்த மார்த்தாண்டனின் விழிகள் உஷ்ணத்தைக் கக்கின. அதனால், வீரர்கள் வேறுவழியில்லாமல் மலைப்பாதையில் இறங்கத் துவங்கினர்.

முன்தினம் பெய்த கனமழையால் பாதை ஈரமாகவும் பாசி படர்ந்தும் இருந்தது. அதனால், அவர்களுக்கு இடையூறு வளர்ந்தவண்ணமிருந்தது. இருந்தும், ஒவ்வொரு அடியாக நிதானமாக எடுத்து வைத்து சம்யுக்தனின் உடலை நெருங்கிக்கொண்டிருந்த சமயத்தில் திடீரென்று, மலைச்சரிவு உண்டானது. சில பாறைகள் உருண்டோடி அருவியில் விழுந்தன. அதில் ஒரு பெரிய பாறை சம்யுக்தனின் உடலின் மேல் விழுந்து அதைக் கூழாக்கியது.

அக்காட்சியைக் கண்ட வீரர்கள் அந்த உடலை எடுத்துச் செல்லமுடியாதென்று உணர்ந்து கொண்டனர். அதனால், மீண்டும் மேலேறி வெறுங்கையோடு மார்த்தாண்டனின் எதிரே நின்றனர். சம்யுக்தனின் உடலின் மேல் பாறை விழுந்ததையும் அது சிதைந்து உருக்குலைந்து போனதையும் அவரிடம் பணிவுடன் தெரிவித்தனர்.

மார்த்தாண்டனுக்கு அவ்வுண்மை கசப்பானதாய்த் தோன்றினாலும் ஏற்றுக்கொள்ள வேண்டியதாய்ப் போயிற்று. மறுகணமே குதிரையில் ஏறி அரண்மனையை நோக்கிச் சென்றார். வீரர்களும் மன்னரைப் பின்தொடர்ந்தனர். மார்த்தாண்டனுக்கு தான் வெற்றி பெற்றதில் மலையளவு மகிழ்ச்சி இருந்தாலும் சம்யுக்தனின் முகத்தைப் பார்க்கவில்லையே என்ற கடுகளவு வருத்தமும் இருந்தது ஏனோ உண்மைதான்.

⋆ ⋆ ⋆

மரத்திலிருந்து முறிந்த ஒரு சிறிய கிளை அருவியில் விழுந்து தண்ணீர் செல்லும் திசையில் அடித்துச் செல்லப்பட்டது. மரக்கிளையால் பாய்ந்து செல்லும் தண்ணீரை எதிர்த்துப் போராடமுடியவில்லை. அதனால் செத்த மீனாக நதி இழுத்துச் செல்லும் திசைக்குச் சென்றுகொண்டிருந்தது. ஒரு காத தூரம் பயணம் செய்த அந்தக் கிளை ஓரிடத்தில் தடைபட்டு நின்றது. சிறிது நேரம் தடைபட்டபடி அங்கேயே இருந்த மரக்கிளையை மீண்டும் தண்ணீர் அடித்துச் சென்றது. அப்பொழுது அது செல்லும் திசையில் உள்ள தண்ணீர் ரத்தமாக மாறியிருந்தது. மரக்கிளையின் முகப்பிலும் ரத்தம் வழிந்தோடிக்கொண்டிருந்தது.

அந்த மரக்கிளையை ஒளியிழந்த கண்களோடும் உடலில் படர்ந்திருந்த வலியோடும் பாறையில் சாய்ந்தபடி சம்யுக்தன் பார்த்துக்கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் மரக்கிளை மறைந்து போனது. சம்யுக்தனின் கண்கள் இருண்டன. அவனது இமைகள் மூடி மீதமிருக்கும் உயிரில் அவனது எண்ணங்கள் கலந்து நடந்த

நிகழ்வுகளை ஒரு முறை மீட்டிப்பார்த்தன. மின்னலின் ஒளிக்கீற்றைப் போல பல நிகழ்வுகள் நொடி நேரத்தில் அவன் உள்ளத்தில் தோன்றின.

மார்த்தாண்டன் தன்னை எப்படியும் கண்டுபிடித்துவிடுவார் என்று உள்ளுணர்வால் உணர்ந்து, தான் ஒரு திட்டத்தைத் தீட்டியதையும் அதைச் செயல்படுத்த பார்த்திபன், விஜயன் ஆகியோரின் உதவியை நாடியதையும், முதலில் பதறிய இருவரும் பின்னர் தன் மேலிருந்த நம்பிக்கையால் அரைமனதோடு ஒப்புக்கொண்டதையும் எண்ணிய அவனது கண்களில் நீர் சுரந்தது.

மார்த்தாண்டன் கோவிலுக்குச் செல்வதை முன்னமே தெரிந்துகொண்டு, அதற்கேற்ப ஒரு திட்டத்தைத் தீட்டினான், சம்யுக்தன்.

மன்னர் மார்த்தாண்டன் கோவிலுக்குச் செல்லும் வழியில் அவரைத் தாக்கிவிட்டு குதிரையில் தப்பித்தோடி அருவியில் குதித்துவிடுவதாகவும், அந்த நேரத்தில் கீழே காத்துக்கொண்டிருக்கும் பார்த்திபனும் விஜயனும், விஜயனின் உயிரிழந்த நண்பனின் உடலுக்கு தன் உடையைப் போலவே ஓர் ஆடையை அணிவித்து தான் குதிக்கும் இடத்தில் கிடத்திவிட்டால் மார்த்தாண்டனும் வீரர்களும் தான் இறந்துவிட்டதாகப் பொருள் கொள்ளுவார்கள் என்றும் நினைத்தான்.

அவன் நினைத்ததைப் போலவே எல்லாம் சரியாக நடந்துகொண்டிருந்த சமயத்தில் தான் விதி வேறு பாதையில் பயணிக்கத் தொடங்கியது. மார்த்தாண்டன் களத்தில் இறங்குவான் என்பதை சம்யுக்தன் யூகிக்கத் தவறிவிட்டான். அங்கு தான் மதி மறைந்து விதியின் ஆட்டம் ஆரம்பமானது.

வேல் எறிவதில் மார்த்தாண்டனுக்கு நிகர் மார்த்தாண்டனே. அவன் குறி இது வரை தவறியதேயில்லை என்ற பெருமையை சம்யுக்தனும் அறிவான். சரியாக அருவியின் அருகே வந்த சம்யுக்தனின் தோள்களில் வேல் பாய்ந்து, அவன் அருவியில் குதித்து உயிர் தப்ப எண்ணிய திட்டத்தைத் தவிடுபொடியாக்கியது.

நடந்தவற்றில் ஒரே ஒரு ஆறுதல் என்னவென்றால் சம்யுக்தனின் திட்டப்படியே அவன் இறந்துவிட்டான் என்று மார்த்தாண்டன் நம்பியது தான். ஆனால், சம்யுக்தன் இறக்கவில்லை. இறந்துகொண்டிருக்கிறான். எப்பொழுது வேண்டுமென்றாலும் அவனது உடலை விட்டு உயிர் பறந்துவிடும்.

மலையிலிருந்து தோள்பட்டைக் காயத்துடன் குதித்த சம்யுக்தனுக்கு அங்கிருந்த பாறைகளில் மோதி தலையிலும் அடிபட்டது. போராட வலுவின்றி தண்ணீர் இழுத்துச் செல்லும் திசைக்குச் சென்றது அவனது உடல். தண்ணீர் அவனை எங்கோ இழுத்துச் சென்று எங்கேயோ விட்டது. ஒரு பாறையைப் பிடித்தபடி படுத்துக்கிடந்தான் சம்யுக்தன். அவனது கால்கள் கைகள் எல்லாமே ஒடிந்துவிட்டதாய்த் தோன்றியது அவனுக்கு.

காலம் சில நேரங்களில் புத்திசாலியையும் முட்டாளாக்கிவிடுகிறது. சம்யுக்தனும் அதற்கு விதிவிலக்கல்ல. மூச்சின் வேகம் மந்தமாகியது. தன் இறுதி நிமிடங்களுக்காக சுயநினைவின்றி வலியோடு காத்துக் கிடந்தான் சம்யுக்தன்.

அவனது எண்ணங்கள் கடைசியாக நினைத்த வார்த்தைகள் "நண்பர்களே என்னை மன்னித்துவிடுங்கள்!"

⭑ ⭑ ⭑

இரவு ஜாமத்தில் வானில் கூடியிருந்த கருமேகங்களைக் கிழித்துக்கொண்டு மழை வெள்ளம் பூமியை நனைத்திருந்த சமயத்தில் வான் மேகங்களின் மேல் தன் விசாலமான இறக்கைகளை விரித்தபடி வந்துகொண்டிருந்தது மார்த்தாண்டனின் கழுகு. மின்னலின் ஒளியும் அசுரனைப் போல் சிரிக்கும் இடியும் அந்த ராஜாளியை சிறிதும் கலக்கமடையச் செய்யவில்லை.

ராஜாளி வீரபுர எல்லைக்குள் பறந்து வந்து அரண்மனையின் மேல் ஒரு வட்டமிட்டது. அது உயரே வட்டமிட்டதால் காவலாளிகளின் கண்களுக்குப் புலப்படவில்லை. ராஜாளி அரண்மனையின் வடக்குப் புறமுள்ள ஓர் அறையின் சாளரத்தில் நின்று தன் சிறகுகளைப் படபடத்தது.

உள்ளே உறங்கிக்கொண்டிருந்த மணியம்மை தன் இமைகளை மெல்லத் திறந்து சாளரத்தை நோக்கினார். மின்னலும் இடியும் ஒன்றாகக் கலந்து ராஜாளியை இன்னும் அகோரமாகக் காட்டியது. முதலில் திடுக்கிட்ட அவர், பின் சுதாரித்துக்கொண்டு மெல்ல ராஜாளியை நோக்கிச் சென்றார். ராஜாளி தன் அலகில் பற்றியிருந்த ஓலையை மணியம்மை பெற்றுக்கொண்டார். தன் வேலை முடிந்ததால் நொடிப்பொழுது கூட தாமதியாமல் ராஜாளி அங்கிருந்து பறந்து சென்றது.

மணியம்மை, சாளரத்தின் வழியே பேரிரைச்சலோடு பெய்துகொண்டிருந்த மழையை ஒரு முறை நோக்கினார். சுற்றியெங்கும் கும்மிருட்டு. பின் தன் விழிகளைக் காவல் புரியும் வீரர்கள் இருக்கும் திசையில் ஓட்டினார். நொடிப்பொழுதில் ஓர் மின்னலின் ஒளி அவர் பார்த்த திசையை வெளிச்சம் போட்டுக் காட்டியது. வீரர்கள் அங்கில்லை. மழையால் எங்காவது ஒதுங்கியிருப்பார்கள் என்று தன்னை ஆசுவாசப்படுத்திக்கொண்டார்.

பின், நடுங்கிய கைகளோடு, தன் அறையில் பிரகாசித்துக்கொண்டிருந்த தீபத்தின் ஒளியில் ஓலையைப் பிரித்துப் படித்தார். ஒரே ஒரு வாசகம் மட்டுமே அதில் எழுதப்பட்டிருந்தது. ஒரு முறைக்கு இரு முறை அதைப் படித்துப் பார்த்தார். மீண்டும் மீண்டும் படித்தார். விஷமப் புன்னகை அவரின் இதழ்களில் தவழ மீண்டும் ஒரு முறை ஓலையை நோக்கினார்,

**அதில், " சம்யுக்தன் இறந்துவிட்டான்" என்று எழுதப்பட்டிருந்தது.**

உடனே, மணியம்மை அந்த ஓலையை தீப ஜ்வாலையில் எரித்தார். அது எரிந்து முடியும் வரை அவரது கண்களில் குரூரம் குடிகொண்டிருந்தது.

தொடர்ந்து படிக்க
**URI**: http://tamilnanbargal.com/node/46558

# கவிதைக்குறள்

## திருக்குறள் தெளிவுரை

செந்தமிழ் தாசன்



**அறத்துப்பால் - பாயிரம்**

**முதலாம் அதிகாரம் - கடவுள் வாழ்த்து**

பாரிமேலழகர் உரை - அஃதாவது, கவி தான் வழிபடு கடவுளையாதல் எடுத்துக்கொண்ட பொருட் கேற்புடைக் கடவுளையாதல் வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த் தேற்புடைக்கடவுளை யெனஅறிக.

குறள். 1. **அகர முதல வெழுத்தெல்லா மாதி**

**பகவன் முதற்றே யுலகு.**

**As all letters have the letter A for their first, so the world has the eternal God for its first.**

பரிமேலழகர் தெளிவுரை- அகரமாகிய முதலையுடைய எழுத்துகளெல்லாம், அதுபோல ஆதிபகவனாகிய முதலையுடைத்துலகு என்றவாறு.

உலகென்றது உயிர்களின் மேல் நின்றது, காணப்பட்ட உலகால் காணப்படாத கடவுள் உண்மை கூறவேண்டுமாயின், ஆதிபகவன் முதற்றே என உலகின் மேல் வைத்துக் கூறினார்.

*அ முதல் னகரம்*
*முடிவாம்*
*தமிழெழுத்து.*
*அவ்வெழுத்துகளின் பிள்ளையார் சுழி*
*“அ“கரம்.*

*அன்னையும் பிதாவும்*
*முன்னறி தெய்வம்*
*உலகின் உயிர்களின்*
*ஆதிபகவன் தெய்வம்.*

*அகரத்தை ஆண்டவன்*
*இறைவன் யென்பேன் யான்*
*(சேய்யின் முதல் சொல் அம்மா)*
*உயிரின் முதல் சொல்*
*“அ“ வன்றோ!*
*உலகின் முதற்பொருள்*
*“அவன்“ னன்றோ!*

*எழுத்தின் முதன்மை அகரம்*
*உயிரின் முதன்மை ஆதி*
*அண்டம் படைத்த பகவன்.*

# சிநேகிதியுடன் தனிமையில் சில நிமிடங்கள்

பூங்கோதை

### 10. தாய் தன் பொண்ணுக்கு சொல்ல வேண்டியவைகள்!

வணக்கம் சிநேகித உள்ளங்களே...

*அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து*
*இன்புற்றார் எய்தும் சிறப்பு.*

*உலகத்தில் இன்பம் உற்று வாழ்கின்றவர்*
*அடையும் சிறப்பு, அன்பு உடையவராகிப்*
*பொருந்தி வாழும் வாழ்கையின் பயன்*
*என்று கூறுவர்*

என்ற திருவள்ளுவரின் உயர்ந்த சிந்தனையோடு சிநேகிதிக்குள் பயணிக்கலாம் வாங்க.

இந்த வாரம் பொதுப்படையாக எல்லோருக்கும் பயன்படும் வகையில் ஒரு நண்பர் இந்தக் கேள்வியை எழுதி அனுப்பியிருக்கிறார். அவருடைய கேள்விக்கு என்னாலியன்ற பதிலைக் கூறியிருக்கிறேன்... இதை வாசிக்கும் நேயர்களும் உங்கள் கருத்துக்களைப் பதிவு செய்து அந்த நண்பருக்கு மேலும் விளக்கங்களைக் கொடுக்க வேண்டும் என எதிர்பார்க்கிறேன்.

> சிநேகிதியுடன்......
> "பிரித்தானியா மற்றும் மேலைநாடுகளில் உள்ள ஒவ்வொரு தமிழ்த் தாய்மார்களும் தமது பெண் பிள்ளைகளுக்கு மாதவிலக்கு பற்றி முழுமையாய் சொல்லி தருகிறார்களா? இல்லை, இங்கு நிலவும் சூழலில் தமிழ்க்கலாச்சாரம் எனும் போர்வையில் மட்டம் தட்டி வைத்திருக்கிறார்களா? கடைசியாய், இது பற்றி சாதாரண தமிழ்த்தாய் ஒருத்தி தன் பிள்ளையை எவ்வாறு வளர்க்க வேண்டும் ?

**தனிமையில் சில நிமிடங்கள்......**

வணக்கம் நண்பா...

ஒரு நல்ல கேள்வியோடு இன்றைய சிநேகிதியை சிந்திக்கத் தூண்டியிருக்கிறீர்கள்.

உண்மையில் ஒரு பெண் பூப்படையும் போது, மாத விலக்கு பற்றி தாய்மாரோ அல்லது சகோதரிகளோ தான் சொல்லிக் கொடுக்கிறார்கள். இதற்கு எமது கலாச்சாரம் எந்த விதத்திலும் தடையாக இல்லை. பொதுவாக பூப்படையும் வயதில் இருக்கும் பெண்கள் தம்மை விட வயதில் அதிகமான பெண்களுடன் நட்பு வைத்திருப்பது அரிது. இதனால், அது பற்றிய அனுபவத்தை நண்பிகளிடம் அறிந்துகொள்ளும் வாய்ப்பும் மிகக்குறைவு. ஆகவே தாய் அல்லது சகோதரிதான் சொல்லிக் கொடுக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது.

இது பற்றி ‘முழுமையாக’ சொல்லிக் கொடுக்கிறார்களா என்றால், தமக்குத் தெரிந்தவரை சொல்லிக் கொடுக்கிறார்கள் என்றே சொல்ல வேண்டும். மற்றப்படி விஞ்ஞான முறையிலான விளக்கங்கள் பல தாய்மாருக்கே தெரியாதவை. ஆனால் அந்தக் குறையையும் நிவர்த்தி செய்வது போல் இதுபற்றி பாடசாலைக் கல்வியில் ஆண் பெண் இருபாலாருக்குமே கற்பிக்கப்படுகின்றது.

இன்னும், மேலைத்தேய நாடுகளில் அதிக இணையத்தளப் பயன்பாடும் பிள்ளைகளுக்கு இவை பற்றி அறிந்து கொள்ள உதவியாக இருக்கின்றது. எனவே, மாதவிலக்கு பற்றி பெண்பிள்ளைகளுக்குத் தெரிய வருகிறதா என்பதையிட்டு கவலையடைய ஏதும் இல்லை என்றே நினைக்கிறேன்.

ஆனால், நீங்கள் இறுதியாகக் கேட்ட கேள்வி மிகவும் அவசியமானது. தாய்மார் தங்கள் பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்பது நிச்சயம் சிந்திக்கப்பட வேண்டிய விடயமே.

பெற்றோர் பிள்ளைகளிடம் நட்புரீதியில் நடந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகிறது. அதுதான் மேலைத்தேய நாடுகளின் எதிர்பார்ப்பாக இருக்கின்றது எனினும், அதைவிட நட்பு ரீதியிலான பிள்ளை வளர்ப்பு தமிழ் தாய்மாருக்கு மிகவும் அவசியமாகிறது. ஏனென்றால், பல விடயங்களை பெற்றோர் மனம் திறந்து பேசவும், பிள்ளைகள் அதை ஏற்றுக் கொள்ளவும் இந்த நட்புறவு அவசியமாகின்றது.

மேலைத்தேய கலாச்சாரத்துக்கேற்ப பிள்ளையை வளர்ப்பது தமிழ்க்கலாச்சாரம் சிதைந்து போக, அல்லது மறக்கப்பட ஏதுவாக அமைகிறது. ஆனால், அதே வேளை தனியே தமிழ்க்கலாச்சாரத்தை மட்டும் ஏற்றுக் கொண்டு வாழ்வது பிள்ளைகளை அவர்களது நண்பர்களிடமிருந்து தனிமைப்படுத்துகிறது. ஆகவே, மேலைத்தேய கலாச்சாரத்தில் சில அனுசரிப்பைச் செய்து கொண்டு தமிழ்க்கலாச்சாரத்தைப் பேணுவதே சிறந்த முறை என நான் நம்புகிறேன். இது மேலைத்தேய நாடுகளில் வாழும் பிற இனத்தவர்களிடையே எந்த வகையிலும் தடையாக இருப்பதில்லை. தமிழினம் மட்டும் தான், எந்த இடத்துக்குப் போகிறோமோ, அந்த இடத்தின் கலாச்சாரத்தை தமதாக்கிக் கொண்டு வாழ்கிறார்கள். இதனால், பிள்ளைகளைக் குறை சொல்ல முடிவதில்லை.

பிள்ளைகளுக்கு சிறு வயதில் இருந்தே இதைச் சொல்லிக் கொடுத்தால், அனேக பெற்றோருக்கு பிரச்சனை இருக்காது. பொதுவாக, எமது நாட்டில் சிறுவயதில் எதையும் கண்டுகொள்வதில்லை. பிள்ளையைத் தன்போக்கிற்கு வளர விடுகிறார்கள். ஆனாலும், எமது நாட்டுச் சூழலில் எமது கலாச்சரம் பேணப்படுவதால், பெரும்பாலும் பிள்ளைகள் இயல்பாகவே அதைப் புரிந்து கொண்டே வளர்கிறார்கள். ஆனால், அதே போக்கை மேலைத்தேய நாட்டிலும் நாம் அனுமதிப்பது தவறு. ஏனென்றால், மேலைத்தேய கலாச்சாரத்தைப் புகுத்துவதில் இங்கே பாடசாலைகள் பெரும்பங்கு வகிக்கின்றன. பிள்ளைகள் தமது 18 வது வயதிற்குப் பின் எப்படியும் வாழலாம் என்ற மன நிலையில்

*மனிதன் படைத்த*
*கடவுள்*
*குழந்தைகள் மட்டுமே*

*தமிழரசி*

வளர்கிறார்கள். எனவே அதற்குச் சரிசமமாக நாம் அவர்களுடைய சிறுபராயத்திலேயே எமது கலாச்சாரம்பற்றிய சிந்தனையைப் புகுத்த வேண்டிய அவசியம் இருக்கின்றது என்றே நம்புகின்றேன். இதற்கு பெற்றோர் மனம் திறந்து பேசவேண்டிய அவசியம் உண்டாகின்றது.

பாடசாலை முடிந்ததும் நேரே வீட்டுக்கு வருவது, சிறு வயது முதலே பிறரைத் தொட்டுப் பேசுவதைத் தவிர்க்கச் சொல்லிக் கொடுத்தல், எந்தச் செயலைச் செய்யவும் பெற்றோரின் அனுமதியைப் பெறுதல், அல்லது குறைந்த பட்சம் பெற்றோருக்கு அதைப்பற்றிப் தெரிவிக்க வேண்டும் என்பதைச் சொல்லிக் கொடுத்தல் போன்ற விடயங்களைக் கடைப்பிடித்தல் மிகவும் அவசியமாகின்றது. ஆனால், இதேவேளை பிள்ளைகளுக்கு அவர்கள் மீது நாம் மிகவும் நம்பிக்கை வைத்திருக்கிறோம் என்ற உணர்வையும் கொண்டிருத்தல் வேண்டும். தற்காலத்தில் பிள்ளைகள் மிகவும் சென்ஸிட்டிவாக வளர்கிறார்கள். குழந்தைப் பருவத்தில் இருந்தே அவர்கள் பெற்றோரின் சிறிய புரிந்துணர்வற்ற செயல்களால் கூட புண்பட்டுப் போகிறார்கள். இது எமது நாட்டில் நடந்தால், பிள்ளைகள் வெளியே இதைப்பற்றி மனமுடைந்து பேசினால், பலர் பெற்றோருக்கு சார்பாகப் பேசி பிள்ளைகளின் மனநிலையை மாற்றி வீட்டுக்கு அனுப்புவார்கள். ஆனால், மேலைத்தேய நாடுகளில் இது தலைகீழாக நடந்துவிடும். பிள்ளை பெற்றோரை விட்டுப் பிரியும் நிலையை சூழ உள்ளவர்களே ஏற்படுத்தி விடுவார்கள். எனவே பெற்றோர் தமது பிள்ளைகளின் மனநிலையைப் புரிந்து அதற்கேற்ப அவர்களைக் கையாளத்தெரிந்திருக்க வேண்டும்.

மேலைத்தேய நாட்டில் வாழும் பெற்றோருக்கு நேரமின்மை மிகப்பெரிய பிரச்சனை. இதனால், பல பெற்றோர் தமது பிள்ளை வளர்ப்பில் தவறிழைக்கிறார்கள். எத்தனை பெற்றோர் தமது பிள்ளைகளைச் சரியாக வளர்க்க வேண்டும் என்பதற்காக, பிள்ளை வளர்ப்புப் பற்றிய புத்தகங்களையோ, அல்லது இணையத்தளங்களிலோ தேடிப் படித்திருப்பார்கள்??? 70% பெற்றோருக்கு இது தெரியாமலே இருக்கிறது என்றே நான் நினைக்கிறேன்.

ஒவ்வொரு பருவத்திலும் பிள்ளை எப்படி நடந்து கொள்ளும் என்பது பற்றிய அறிவு பெற்றோருக்கு இருக்குமானால் அவர்களைக் கையாள்வது மிகவும் இலகு. உதாரணமாக டீன் ஏஜ் பருவத்தில் பிள்ளைகள் 'ரோல்மொடல்'களைக் கொண்டு வாழ ஆரம்பிப்பார்கள். அவர்களைக் கவர்ந்த ஒரு சினிமா நடிகன், நடிகை, அல்லது சாதாரண வாழ்க்கையில் அவர்கள் மனதுக்குப் பிடித்த ஒருவரது நடை உடை பாவனைகளை பின்பற்றுவார்கள். சிலர் தமக்கென ஒரு தனிச் செயற்பாடுகளை ஆரம்பிப்பார்கள். ஒரு ஹீரோ/ஹீரோயினாக தம்மைக் கற்பனை செய்ய ஆரம்பிப்பார்கள். இது உளவியல்ரீதியாக அந்த வயதில் அவர்களுக்குள் ஏற்படும் மாற்றம் என்பதைப் பெற்றோர் புரிந்து கொண்டு அவர்களை மெதுவாக, மென்மையாக கையாள வேண்டும். அதை விடுத்து, அவர்களைக் கண்டபடி திட்டுவதும், பிறரிடம் போய் பிள்ளைகளை பற்றிக் குறை பேசுவதும் அவர்களை நோகடிக்கும். பல பெற்றோர் இந்த இடத்தில் தவறு செய்வதைக் காணமுடியும். எனவே இதற்கு தகுந்த வழி, முதலில் பிள்ளைகளின் வளர்ச்சிப் படி பற்றி பெற்றோர் தேடிக் கற்க வேண்டும். அத்தோடு தாம் வாழும் நாட்டின் சட்டங்களைப் பற்றி அறிந்து கொள்வதும் ஒரு குடும்பவாழ்க்கைக்கு அவசியமாகிறது.

மேலைத்தேய நாடுகளில் வாழும் பல தமிழ் குடும்பங்களில் சில பெற்றோர் நாட்டின் சட்ட திட்டம் அறியாமல், தமது குடும்பத்தில் ஏற்படும் சிறுபிரச்சனைக்கும் போலீசை அழைத்து அதனால் பெரும் பிரச்சனைகளைச் சந்தித்து, பிள்ளைகளும் அவர்களிடமிருந்து பிரிக்க பட்டு, அதனால் இன்னும் அதிக மன அழுத்ததுக்குள்ளாகிய சம்பவங்கள் பல உண்டு. இதனால் பிள்ளைகளின் வாழ்க்கையும் பாதிக்கப் படுவதுடன், சிறுவயதிலேயே பிள்ளைகளின் மனதில் தமது பெற்றோரை பற்றிய தவறான எண்ணத்தையும், மனதில் வன்முறையையும் விதைத்து விடுகிறார்கள்.

நண்பா, எனக்குப் புரிகிறது... பெண்கள் பற்றி பேச ஆரம்பித்து பொதுவாக பிள்ளைகள் என்ற இடத்தில் நான் வந்து நிற்கின்றேன் என்று. எமது பெற்றோர் பெண்பிள்ளைகளைப் பார்த்துப் பார்த்து வளர்த்துவிட்டு ஆண்பிள்ளைகளை அவர்கள் போக்கில் விடுவதாலேயே மேலைத்தேய நாடுகளில் சிறு வயதிலேயே சில ஆண்பிள்ளைகள் வன்மக் குழுக்களாக உருவெடுக்கிறார்கள், அல்லது அத்தகைய குழுக்களோடு இணைந்து கொள்கிறார்கள். எனவே, பெண் பிள்ளைகளை மட்டுமன்றி, ஆண்பிள்ளைகளையும் பெற்றோர் சரியாக வளர்க்க வேண்டிய அவசியம் பெற்றோருக்கு இருக்கிறது.

பெற்றோர் பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்பது பற்றி சொல்லிக் கொண்டே போகலாம். ஆனால் பதிவும் நீண்டு கொண்டே போகிறது என்பதால் இத்தோடு நிறுத்திக் கொள்கிறேன், இதுபோன்ற கேள்விகள் சிநேகிதிக்கு வரும் போது இன்னும் பல விடயங்களைப் பேசலாம்.

*மிக்க நன்றி அன்புச் சிநேகித உள்ளங்களே... மீண்டும் அடுத்தவாரம் இன்னொரு சிநேகிதியின் கருத்தில் சந்திக்கலாம். உங்கள் கேள்விகளை தயவு செய்து poongothaichelvan8@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு எழுதி அனுப்புங்கள்.*

# என் நினைவுகளின் ஒரு துளி

*கனகீஸ்*

இனி இழப்பதற்கு ஒன்றும் இல்லை
என்னை இழந்தேன் இதோ இன்று
உன்னையும் இழந்துவிட்டேன்…

வாழ் நாள் முழுதும் வருத்தப்பட
உன் அன்பு இருக்கிறது போதும்
இது போதும் எனக்கு…

என் கண் இமைக்கும் காரணம் கேட்கும்
உன் புது முகம் எனக்கு புலப்படவில்லை
நிமிடங்களை கணக்கு பார்க்கும் இந்த
நரகவலி என்னை தகர்க்கிறது…

உடைந்து போனேன் நான் உள்ளம்
முழுதும் புரையோடிய புண்கள்…
நீ மருந்திட்டது சில காலம்…

குணப்படுத்த முடியாமல் விட்டு போகிறாய்…
ஒரு வேளை எனக்கு இருப்பது தொற்று நோயோ…
தொட்டால் ஒட்டிக் கொள்ளுமோ…
என்னால் உனக்கு நோயென்றால் நான்
மருந்திட முடியாதுதான் மன்னிப்பு கேட்கிறேன்…

உனக்காய் தான் எல்லாமும் என்றிருந்தேன்…
என் உள்ளத் தராசில் என்றுமே நீ உயரமாய்…
நீ விலகிப் போகிறாய் உன் கரம் பற்றி நான்
கதறிடவே நினைக்கிறேன்… நான்
தடுப்பதால் மீண்டும் நீ துயர் பெற்றிடுவாய்
என நினைத்தே நான் விலகுகிறேன்…

என் விழிநீரின் உண்மை புரியாது எனும் போது
என் வாய் மொழி என்னை புரிய வைத்திடுமா உனக்கு…
நீ பேசாமல் போகிறாய் வருத்தம் தான் எனக்கு
இருக்கட்டும் என்னால் உனக்கு துன்பம்
என்றால் அதைவிட வேறு வலி எனக்கு பெரிதில்லை…

உனக்காய் இழக்கிறேன் உன்னையும்…
எல்லாம் கடந்து போகுமென்கிறார்கள்…

கடந்து போக நீ என்ன ஆற்று நீரா?
என் உயிரின் துடிப்பு… நீ கடந்து போனால்
நான் வாழ்வது எப்படி?…

நீ மடிந்து போ
என்றாலும் நான் மனதார போகிறேன்…
என்னை இல்லை என் அன்பை உண்மையென
ஏற்றுக் கொள்… என் இதயம் துடிக்கும்
போதெல்லாம் அதன் சத்தத்தை நான்
சகைகளால் வெளிப் படுத்துகிறேன்…
நீ சட்டை செய்வதில்லை…

நீ கோபுர கலசம் நான் குப்பை
காற்று அடித்ததால் கலசம் தொட்டேன்…
இனி மீண்டும் புதைந்து போகிறேன்
உன் நினைவை சுமந்த படி பூமிக்கு அடியில்…

உன் அன்பை நான் களங்கப்படுத்த மாட்டேன்
என் காலம் உள்ளவரை நான்
மறைத்துக் கொண்டு சிரிக்க பார்க்கிறேன்
என் விழி ஓரங்களில் நீர்த்துளிகள்…

## அழகு

*காரை சீனு*

உனக்கு
கோபம்கூட அழகுதான்.
நீ வெட்கப்பட்டால்
வேறெங்காவது
பார்ப்பாய்…

கோபப்பட்டால்
நீ
என்னை மட்டுமே
பார்ப்பாய் …!

# உறவைத் தேடும் உயிர்

- 10

Sivaji dhasan




**தேடல் - 10**

குளிரையே தனக்குப் போர்வையாக்கிக் கண்களை மூடி மயக்க நிலையில் இருந்த வசந்தனது உடல் முழுதும் வெண்பனித்துளிகள் படர்ந்து குளிர்ச்சியை அதிகப்படுத்தி அவனை வாட்டமுறச் செய்தன. அதையும் தாங்கிக்கொள்ள அவன் மனம் பழகிக்கொண்டது. கண்களைத் திறந்து பார்த்தான்.

சந்திரன் இல்லை; நட்சத்திரங்கள் இல்லை; எங்கும் இருள்; சிறு வெளிச்சம் கூட இல்லாமல் அவன் மனதை நடுங்கச் செய்தது. நடுங்கியபடியே கடலை நோக்கினான். தங்கமுலாம் பூசி அதில் வைரங்களைப் பூக்களாகத் தூவி வெள்ளியை அதனுடன் கலந்து ஓட விட்டால் எப்படி இருக்குமோ அப்படியிருந்தது கடல். கோர சத்தம் அவன் காதைக் கிழித்தது. அவ்வப்போது ஒரு மாபெரும் அலை எழுந்து அவனைத் தாக்க வருவதாய்த் தோன்றியது அவனுக்கு. எதிரே மாபெரும் ஒளிக்கீற்று ஒன்று விஸ்வரூபம் எடுத்து அவன் கண்களைக் கூசச் செய்தது. அவனுடைய கண்கள் ஒளிக்கீற்றைச் சந்திக்கமுடியாமல் கூசியபடியே திரையை மூடிக்கொண்டது. மூடிய இமைகள் திறக்கவே இல்லை. அவன் மனது அமைதி அடைந்து அவனை மயக்க நிலைக்குத் தள்ளியது. தன் நினைவுகள் தன்னை விட்டு அகன்று எங்கோ தூரத்தில் தெரிந்த ஒளியை நோக்கி பறந்து செல்வதாய்த் தோன்றியது அவனுக்கு.

கடல் அலைகளின் மேல் பல தீய ஆத்மாக்கள் சத்தமிட்டபடி எழுந்தன. கடலின் மஞ்சள் ஜலத்தில் தவழ்ந்தபடி வசந்தனின் அருகில் வந்து பல ஆத்மாக்கள் சூழ்ந்து வட்டமிட்டன. கோரமாக சத்தமிட்டபடி வசந்தனை நெருங்கின. அந்தக் குரல்கள் இரும்பும் பாறைகளும் ஒன்றோடொன்று மோதி மலையின் மீது உருட்டிவிட்டதைப் போலிருந்தன. வசந்தனின் கண்கள் மெல்லத் திறந்தன. அவனது இமைகளில் பனி படர்ந்திருந்ததால் திறக்கச் சிரமபட்டான். இருந்தும் திறந்து பார்த்தவன், ஆத்மாக்களின் கோரமுகத்தைக் கண்டு நொடிப்பொழுதில் கண்களை மூடினான்.

அப்போது ஓர் இரும்புக்குரல் அவன் காதில் விழுந்தது.

"வசந்தா ! இன்னுமா தூங்கிக்கொண்டிருக்கிறாய்? உனக்கு வேலை கொடுத்து நான் வீடில்லாமல் நடுத்தெருவில் நின்றுவிடுவேன் போலிருக்கிறதே" என்று புலம்பியது அந்தக் குரல்.

வசந்தன் மெல்ல இமைகளைத் திறந்தான். அவனுக்கு முதுகு காட்டியபடி ஒரு பெரியவர் எதையோ செய்துகொண்டிருந்தார். வசந்தன் ஒரு கட்டிலில் படுத்துக்கிடந்தான். என்ன இது என்று அதிர்ச்சியோடு எழுந்தபோது, அந்தப் பழைய கட்டில் ஒரு வித ஒலியை எழுப்பியது.

"நான் எங்கிருக்கிறேன்?" என்று நெற்றியைத் தேய்த்தபடி கேட்டான்.

பெரியவர் செய்த வேலையை விட்டு விட்டு அவனது முகத்தைக் கூர்மையாகப் பார்த்தார்.

"எங்கிருக்கிறேன் என்றா கேட்டாய்? மிகவும் நல்லது. என்னையாவது யாரென்று தெரிகிறதா?" என்றார்.

இல்லை என்பதைப் போல் தலையாட்டினான்.

"விளையாட்டு போதும். உனக்கு வேலை வந்திருக்கிறது. சீக்கிரம் தயாராகு" என்றார்.

அதைக் காதில் வாங்கியபடி அந்த அறையை நோட்டமிட்டான் வசந்தன். மரவேலைப்பாடுகளுடன் கூடிய அழகிய அறை அது. சுவற்றில், அழகைக் கூட்டக்கூடிய படங்கள் ஆங்காங்கே தொங்கவிடப்பட்டிருந்தன. அவன் நேர் எதிரே உள்ள

சுவற்றின் மேல் ஒரு பெரிய கடிகாரம் தொங்கவிடப்பட்டிருந்தது. அது மணி பதினொன்றைக் காட்டியது. கடிகாரத்தினுள் சுற்றும் நொடி முள்ளை வெறித்தபடி தன்னுடைய ஆடையைப் பார்த்தான். இரவு உடை அது. கருப்பு வெள்ளை நிறத்தில் வடிவமைக்கப்பட்டிருந்தது அவ்வாடை. அதைத் தொட்டுப்பார்த்தபடி ஒன்றும் புரியாமல் விழித்தான்.

பெரியவர் சூடான இறைச்சியைப் பொரித்துக்கொண்டிருந்தார். அதனுடைய வாசனை அவன் வயிறைக் கடித்து பசியைத் தூண்டியது. அருகில் இருந்த ஜன்னலை நோக்கினான். வெளியே மக்கள் அரக்கப் பறக்க எதையோ தேடிக்கொண்டிருப்பதைப் போல் சென்றுகொண்டிருந்தனர். என்ன நடக்கிறது என்று புதிதாய்ப் பிறந்த கன்று போல் சுற்றிச் சுற்றிப் பார்த்தான்.

சூடான மாமிசத்தைச் சமைத்துக்கொண்டிருந்த பெரியவர் அவனை நோக்கி, "இன்னும் நீ என்ன செய்துகொண்டிருக்கிறாய்?" என்றார்.

"எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. நீங்கள் யார்? நான் எப்படி இங்கு வந்தேன்? இது எந்த இடம்?" என்று தொடர் கேள்வியை அவரைப் பார்த்து எறிந்தபடி இருந்தான் அவன்.

"இதோ பார் வசந்தா! என்னைக் கோபப்படுத்தாதே. நமக்கு ஒரு உத்தரவு வந்திருக்கிறது. இதோ இப்பொழுது செய்துகொண்டிருக்கும் இந்த உணவை இரண்டு தெரு தள்ளி இருக்கும் சந்தோஷ் என்பவனுக்குக் கொடுத்து அவன் கொடுக்கும் பணத்தை நீ வாங்கிவரவேண்டும். நேரம் கடத்தினால் பணமும் கிடைக்காது. உனக்குச் சம்பளமும் கிடைக்காது. உனக்குப் புது ஆடை வாங்கி வைத்திருக்கிறேன். அதோ அந்த மேசை மீது இருக்கின்றது. அதை அணிந்துகொண்டு புறப்படு" என்றார் வேக வேகமாக.

தான் எது கூறினாலும், அவர் அதைக் கண்டுகொள்ளவும் மாட்டார், என்னவென்று கேட்கவும் மாட்டார் என்று தெரிந்துகொண்ட வசந்தன், மேஜை மீதிருந்த ஆடையை எடுத்தான். குளிருக்கு இதமான அடர்த்தியான ஆடை அது. அதை எடுத்துக்கொண்டு பெரியவரை ஒரு முறை நோக்கிவிட்டு குழப்பத்தோடு ஓர் அறைக்குள் நுழைந்தான்.

ஆடையைக் கலைக்கும் போது, ராஜீவ், ஷோபனா, மெமோரியல் உலகம் என் அத்தனை எண்ணங்களும் பசுமையாகப் படர்ந்து அவன் மனதில் தென்றலாய் வீசியது. இப்பொழுது நடக்கும் நிகழ்வுகள் நிஜமா? ஆச்சர்யங்கள் நிறைந்த சொர்க்கத்தில் சில காலம் வாழ்ந்தோமே அது நிஜமா? என்று குழம்பினான். எனக்கு எதுவுமே ஞாபகம் இல்லையே. என்ன இது மாயை என்று நொந்துகொண்டான். அழ வேண்டும் போலிருந்தது. இருந்தும் மனதைத் திடப்படுத்தி, உடையை உடுத்தினான். ஒரு தொப்பி இருந்தது. அதையும் அணிந்துகொண்டு வெளியே வந்தான்.

அதற்குள் அந்தப் பெரியவர், மாமிசத்தைத் தயார்செய்து, எடுத்துப் போக வசதியாக ஒரு பையில் போட்டுக்கொடுத்தார். "மறக்காதே! சந்தோஷ் தானா என்று உறுதிசெய்துகொண்டு கொடு" என்றார். வசந்தன், அதற்குப் பதில் கூறாமல் வெளியே வந்தான்.

வாசற்படியில் நின்று வீதியை நோக்கிவிட்டு தான் இருந்த வீட்டின் முகப்பை நோக்கினான். அது ஒரு கடை என்பது அவனுக்குப் புரிந்தது. கலங்கிய நீரோடையாய் குமுறிய மனதோடு அங்கேயே நின்று வெறித்துக்கொண்டிருந்தான்.

"நீ இன்னும் போகவில்லையா? சீக்கிரம் ! " என்று பெரியவர் கத்தினார். "உன் வண்டியை எடுத்துக்கொண்டு போ" என்றார்.

*உன் மின்னல் விழிகளால் மட்டும் தான்*
*இன்னும் என் இதயத்திற்குள்*
*காதல் மின் வெட்டு*
*நடைப்பெறுகிறது......*

*தமிழரசி*

வசந்தன் கடையின் வாசலில் நின்றுகொண்டிருந்த ஒரு இருசக்கர வாகனத்தையும் அதன் மேலிருந்த தலைக்கவசத்தையும் நோக்கினான். அது ஒரு சின்ன வண்டி தான். அதன் மேல் தூசு படிந்து சிறிது அலங்கோலமாகக் காட்சி தந்தது. அதில் ஏறி வீதியில் இருக்கும் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு புறப்பட்டான். அலுவலகம் செல்வோர், பள்ளிக்கூடம் செல்லும் குழந்தைகள், குழந்தைகளை கைப்பிடித்து அழைத்துச் செல்லும் பெற்றோர்கள், இரவு மூடிய தங்களது கடைகளைத் திறந்துகொண்டிருக்கும் வியாபாரிகள் என அவ்வீதி நிரம்பியிருந்தது. வீதியின் ஓரத்தில் மலர் விற்போர் வண்ண வண்ண மலர்களை வைத்துக்கொண்டு வாங்குவோரிடம் மலரின் பெருமையைப் பேசிக்கொண்டிருந்தனர். கலைநயப்

பொருள்களும் ஆங்காங்கே இருந்தன. அதில் கடவுள் சிலைகளோடு யானை சிலை, குதிரை சிலை ஆகிய சிலைகளும் இருந்தன .

நேற்று மாமழை வந்திருக்கும் போலும். வீதி முழுதும் ஈரமாகவும் வானம் இன்னும் மேகமூட்டமாகவும் எப்பொழுது வேணுமானாலும் மழை பொழியும் என்பதாக இருந்தது.

கூட்டத்தை விலக்கி விட்டபடி வண்டியில் சென்ற வசந்தன், என்ன தான் நடக்கிறது என்று பார்த்துவிடுவோமே என்று எண்ணி வண்டியின் வேகத்தைக் கூட்டினான். அடுத்த தெருவுக்குச் செல்லும் திசைகாட்டி, அவனுக்குச் செல்ல வேண்டிய வழியை மௌனமாகக் கூறியது.

வண்டியை வலது புற வளைவில் செலுத்தினான். அங்கிருக்கும் சிலரிடம் சந்தோஷின் விலாசத்தைக் கேட்டுக் கண்டுபிடித்து சரியாக சந்தோஷின் வீட்டின் முன் நிறுத்தினான்.

வாசற்படியில் ஏறி, கதவைத் தட்டினான். கதவு திறக்கவில்லை. சாலையில் போவோர் வருவோர் அவனையே பார்ப்பதைப் போல் பிரம்மை தோன்றியது. ஆத்திரத்தோடு கதவை வேகமாகத் தட்டினான். சில நொடிகளில் பதில் கிடைத்தது. கதவை ஒருவன் திறந்தான்.

வந்தவனைப் பார்த்து அதிர்ந்தான் வசந்தன். என்ன நடக்கிறதென்று உரக்கக் கத்தவேண்டும் போலிருந்தது அவனுக்கு. காரணம் கதவைத் திறந்தது ராஜீவ். ராஜீவை போல் இருந்தவன் வசந்தனை ஏற இறங்க ஒரு பூச்சியைப் பார்ப்பதைப் போல் பார்த்தான்.

"உங்கள் பெயர் என்ன?" என்று குரலில் நடுக்கத்தோடு கேட்டான் வசந்தன்.

"சந்தோஷ்" என்று கூறியபடி கையிலிருந்த பையைப் பார்த்து, "எவ்வளவு நேரம் காத்திருப்பது?" என்று கடுமையான பார்வையை வசந்தனின் முகத்தில் வீசிவிட்டு அதைப் பிடுங்கினான்.

அவன் முகத்தையே புரியாமல் வெறித்துக்கொண்டிருந்த வசந்தனின் கையில் அலட்சியமாகப் பணத்தைத் திணித்து கதவைப் படார் என்று மூடிக்கொண்டான் சந்தோஷ்.

வசந்தன் தன் நெற்றியில் படர்ந்திருந்த வியர்வைத்துளிகளைத் துடைத்துக்கொண்டே கையிலிருக்கும் பணத்தை சட்டைப் பையில் போட்டுக்கொண்டு வண்டியில் உட்கார்ந்து கிளம்பத் தயார் ஆனான். அப்பொழுது அவன் சட்டைப் பையிலிருந்த செல்பேசி ஒலித்தது. அதை எடுத்துக் குழப்பத்தோடு உற்றுநோக்கிவிட்டு காதில் வைத்தான்.

"எவ்வளவு நேரம் நான் இங்கே காத்திருப்பது?" என்றது பொய்யான கண்டிப்போடு தேனொழுகும் குரலில் ஒரு பெண்.

"யார் நீங்கள்?" என்றான்.

"ஓ...அதற்குள்ளாகவே காதலியை மறந்துவிட்டதா" என்றாள். இம்முறை நிஜக் கண்டிப்பு தெரிந்தது.

வசந்தன் தலையைச் சொறிந்தபடி புரியாமல் நின்றான்.

"ஹலோ இருக்கீங்களா?" என்றது அப்பெண்ணின் குரல்.

"எங்கிருக்கீங்க நீங்க? ம்ம்..சொல்லுங்க..நீங்க எங்க இருக்கீங்க?" என்றான்

"நீங்க காத்திருக்கச் சொன்ன அதே மலை மேலே தான். பெயர் கூட மலர்த்தோட்டமலை என்று சொல்வார்கள்" என்றாள் பரிகாசத்தோடு.

"சீக்கிரம் வருகிறேன்" என்று துண்டித்தான். பிறகு, சிறு சிந்தனையில் வீழ்ந்து மலர்த்தோட்டமலை இருக்கும் இடத்தை விசாரித்து வண்டியை செலுத்தினான்.

விரைவாகச் சென்றுகொண்டிருந்த சமயத்தில் அவனது மனதில் ஒரே ஒரு கேள்வி மட்டும் தான் எழுந்தது. எனக்கு மட்டும் ஏன் இப்படி நடக்கிறது என்ற ஒரு கேள்வி அவனது மொத்தக் குமுறலையும் ஒன்றாக இணைத்துக் கேட்டது.

மலர்த்தோட்டமலையின் அடிவாரத்திற்கு வந்துவிட்டான். பெயருக்கு ஏற்றார் போல் மலர்களால் அலங்கரிக்கப்பட்டிருந்தது மலர்த்தோட்டமலை. வண்ண வண்ண மலர்களின் பல வித மணம் ஒன்றாகக் காற்றில் கலந்து அங்கே சுற்றிக்கொண்டிருந்தது. அதன் அழகில் நடந்ததையெல்லாம் மறந்துவிட்டான் வசந்தன். சிறிது நேரத்தில் நினைவு வந்தவனாய் மலர்களின் நடுவே இருந்த பாதையில் ஓடினான். பல பேர் அங்கும் இங்கும் குழுமியபடி இருக்கும் இடத்தில வந்து சேர்ந்தான்.

எங்கே அந்தப் பெண் என்று சுற்றும் முற்றும் தேடினான். பல பெண்கள் அவனைக் கடந்து சென்றார்கள். யாரும் அவனை ஏறெடுத்துப் பார்க்கவில்லை. மீண்டும் செல்பேசி ஒலித்தது. அதை காதில் வைத்து கண்களால் தேடினான்.

"என்னைக் காணாமல் தேடுறீங்க போலிருக்கிறது?" என்ற சிரிப்பு கலந்த அதே பெண்ணின் குரல்.

"எங்கிருக்கிறாய் நீ?"

"திரும்பிப் பாருங்கள்!" என்றது அந்தக் குரல்.

திரும்பிப் பார்த்தான். மீண்டும் அதிர்ச்சி அவன் தலையில் இறங்கியது. எதிரே ஷோபனா பட்டாடை உடுத்திச் சிரித்த முகத்தோடு நின்றுகொண்டிருந்தாள். அவள் கார்கூந்தலில் ரோஜாமலர் காற்றோடு இசைந்தாடிக்கொண்டிருந்தது.

"நீங்கள் தான் காதலனா? சொன்ன நேரத்திற்கு என்றாவது வந்திருக்கிறீர்களா?" என்றாள் மலர் முகத்தில் கோபத்தைச் சுமந்தபடி.

அவளது முகத்தை உற்றுநோக்கினான். கண்களை நேருக்கு நேர் சந்தித்தான். அவளது இதழில் புன்னகை அரும்பி அவனைக் கிறங்கச் செய்தது. இருந்தும் ஏதோ ஒரு உணர்வு அவனைத் தடுமாறாமல் தடுத்து நிறுத்தியது.

"கனவு தான் புரியாமல் இருக்கும்" என்று ஒரு குரல் அவன் காதுகளில் அவனுக்கு மட்டும் கேட்குமாறு ஒலித்தது. அவன் மனம் திடமானது. கண்களில் உறுதி குடிகொண்டது. சுற்றி நடக்கும் எல்லாவற்றையும் நோக்கினான். எல்லாம் மறைந்துகொண்டே சென்றது. எதிரே இருந்த ஷோபனாவின் உருவம் அகோரமாக மாறியது. வசந்தன் விழித்தான். தீய ஆத்மாக்கள் சிதறிச் சென்று விழுந்தன.

வசந்தன் எழுந்தான். உடல் முறுக்கேறியது. நரம்புகள் துடித்தன. கண்களில் இருக்கும் உறுதி குறையவில்லை. செல்வம் கூறியது அவன் நினைவுக்கு வந்தது. நடந்தவை எல்லாம் தீய ஆத்மாக்களின் வேலை தான் என்று தெரிந்துகொண்டான். தன் நினைவினில் நுழைந்து தான் பூமியில் வாழ்வதைப் போன்று ஒரு மாயையை உண்டாக்கித் தன்னையே ஆட்டிவைத்த தீய ஆத்மாக்களை முறைத்தான்.

ஓர் ஆத்மா வசந்தனைத் தாக்க ஓடி வந்தது. சற்றும் தளராமல் அலட்சியப் பார்வை வீசிய வசந்தன் அதை இலகுவாகத் தாக்கித் தூக்கி எறிந்தான். சுற்றி இருக்கும் ஆத்மாக்கள் ஒன்றாகத் தாக்க வந்த போதும் அவனது தைரியம் குறையவில்லை. பந்தாடத் துவங்கினான். ஆத்மாக்கள் தன் பலத்தால் நிலைகுலைவதைக் கண்டு அந்த ஊக்கத்தில் பலம் பெருகிய உணர்வோடு போராடினான். சளைக்கவில்லை; சோர்வடையவில்லை; முடியும் முடியும் என்ற குரல் அவனை வீரனாக்கியது.

அவனது மன உறுதியோடு ஆத்மாக்களால் போராட முடியாமல் தங்க நிற ஜலத்தில் ஓடி ஒளிந்துகொண்டன. அதில் ஓர் ஆத்மா மட்டும் கொடூரக் கண்களோடு அவனை நோட்டமிட்டுச் சென்றது. அந்தப் பார்வையில் நீ அழியப் போகிறாய் என்ற அர்த்தம் ஒளிந்துகொண்டிருந்தது.

நீண்ட பெருமூச்சு அனலாக வெளிவந்து குளிர்காற்றில் கரைந்து போனதை வசந்தன் கண்டுகொள்ளவில்லை. இந்தத் தீய ஆத்மாக்கள் தன் எண்ணங்களில் நுழைந்து விளையாடியதை அவனால் பொறுக்கமுடியவில்லை. ஷோபனாவைத் தன் காதலி ஆக்கியது தான் அவனது கோபத்தைக் கிளறிவிட்டிருந்தது. அந்தக் கோப அனலில் அவன் தூக்கம் அவனை விட்டு எங்கோ பறந்து சென்றுவிட்டது. அவனது மூளையில் ஒரு கேள்வி அவன் மனதிடம் கேட்டது. இந்த வேலை வேண்டுமா? இதோடு போதும் என்று திரும்பி விடலாமா? என்றது. என்ன ஆனாலும் ஒரு கை பார்த்துவிடவேண்டும். வேலையில் சேர்ந்துவிடவேண்டும். பட்ட துன்பங்களின் வடுக்களுக்கு மருந்து பூச வேண்டும் என்றது.

வசந்தன் மின்னிக்கொண்டிருக்கும் தங்க ஜலத்தையே கூர்மையாக நோக்கிக்கொண்டிருந்தான். சீக்கிரம் விடிய வேண்டும் என்ற எண்ணம் அவன் மனதில் அரிக்கத்தொடங்கியது. காற்று ஜிவ்வ்வென்று வீசி உறைய வைத்த போதும் அவனது உறுதி குறையவில்லை. சிந்தித்தபடியும் எப்பொழுது பொழுது புலரும் என்ற எதிர்பார்ப்பிலும் காத்துக்கொண்டிருந்தான். இன்னும் நிலவு தோன்றவில்லை. நட்சத்திரங்கள் ஜொலிக்கவில்லை. நாம் வேறு உலகிற்கு வந்துவிட்டோமா என எண்ணினான்.

சில நாழிகையில் செல்வம் அவன் முன் தோன்றினார். சிரிப்பில் பரிகாசத்தைக் கலந்து வசந்தனைப் பார்த்தார்.

"என்ன தம்பி! தயாராகி விட்டாயா? அல்லது இத்தோடு முடித்துக்கொண்டு வேறு வேலையைப் பார்க்கிறாயா?" என்றார்.

"இல்லை ஐயா! பொழுது புலர்ந்ததும் நான் போட்டியில் கலந்துகொள்ளப் போகிறேன்" என்றான் வசந்தன் திடமான மனதுடன்.

"உண்மையைத் தான் சொல்கிறாயா?" என்றார் அவர் ஆச்சர்யம் பொங்க.

"ஆமாம்"

"சரி, கடலில் இறங்கி உன் மரக்கலத்தைக் கண்டுபிடி" என்றார் செல்வம்.

"இன்னும் பொழுது விடியவில்லையே" என்றான் வசந்தன் விழித்தபடி.

""நீ ஜெயிக்கும் வரை உனக்கு விடிவது தெரியாது. தோற்றுவிட்டால் இருள் படர்ந்த கொடூர உலகில் வாழ்வாய். நேரம் ஆகின்றது. கடலில் இறங்கி மரக்கலத்தைத் தேடு" என்றார்.

வசந்தன் புரியாமல் கடலை நோக்கிச் சென்றான். தங்கநீர் அவனைச் சுருட்டி உண்ண அலையைப் பொங்கி எழச் செய்து அவனை நோக்கி ஓட விட்டது. வசந்தன் சிறிது நேரம் கண்களை மூடினான். அப்பொழுது அந்த அலை அவன் மேலே மலை மேலிருந்து விழும் அருவியாகக் கொட்டியது.

லேசாக மூச்சு முட்டினாலும் சுதாரித்துக்கொண்டு கண்களைத் திறந்தான் வசந்தன். அவன் கண்களையே அவனால் நம்ப முடியாமல் போனது. சுற்றியெங்கும் தங்க நிறக் கடல் சூழ்ந்து நிலப்பரப்பை மறைத்தது.

எதிரே ஒரு மரக்கலம் தோன்றியது. ஆர்வத்தோடு அதை நோக்கி நீந்திச் சென்றான் வசந்தன். மரக்கலத்தின் அருகே நெருங்கும் பொழுது அது மறைந்துவிட்டது. சிறிது தூரத்தில் மீண்டும் அது தோன்றியது. அதைப் பிடிக்க வேகமாக நீந்தினான். அலை அவனை வேறு பக்கம் இழுத்துச் சென்றது. இருந்தும் முயற்சியை விடாமல் மரக்கலத்தை நோக்கிச் சென்றான். மீண்டும் மறைந்துவிட்டது.

அப்பொழுது தீய ஆத்மாக்கள் அவனைச் சூழ்ந்து தாக்கத் தொடங்கியது. அவனால் சமாளிக்க முடியவில்லை. தப்பிக்கும் வழியும் இல்லை. ஒரே வழி, இவர்கள் கையால் சாக வேண்டும் என்பது தான். அவனைக் கடலில் இழுத்துக்கொண்டு போனது தீயாத்மாக்கள். கடற் செடிகள், பாசிகள், முத்துக்கள் எல்லாம் மின்னிக்கொண்டிருந்த இடத்திற்கு அழைத்துச் சென்று அவனை சுவாசிக்க விடாமல் செய்து கோரமாகத் தாக்கி அவனை வீசி எறிந்தன. எல்லாம் முடிந்துவிட்டது போன்ற ஓர் உணர்வு அவனைச் சோர்வடையச் செய்து அவன் கண்களை மூடச் செய்தது. அப்படியே இருந்தான். அவனது மெல்லிய மூச்சு தண்ணீர் முட்டைகளாக வந்துகொண்டிருந்தன. கடைசி முறையாக ஒரு முறை கண்ணைத் திறந்து பார்க்கலாம் என்று தோன்றியது அவனுக்கு. மெதுவே கண்களைத் திறந்தான்.

தூரத்தில் ஒரு வெள்ளை நிற வெளிச்சம் அவனை நோக்கி வந்துகொண்டிருந்தது. அதுவும் தாக்கப்போகிறது போலும் என்று நினைத்தான். அது நெருங்கி வர வர அது ஒரு பெண் என்று புரிந்தது. கடற்கன்னியா? என்று எண்ணினான். அவளின் முகத்தைச் சரியாகப் பார்க்கமுடியவில்லை. தண்ணீரில் வரைந்த ஓவியமாகத் தோன்றினாள் அவள். அவன் மீண்டும் கண்களை மூடினான். அவனை நெருங்கி வந்த அவள் அவனை இழுத்துச் சென்றாள். விதி முடிந்துவிட்டது என்று எண்ணினான் வசந்தன். அவள் அவனைக் கடலின் மேல் மட்டத்துக்கு இழுத்துக்கொண்டு போனாள்.

தண்ணீரைக் கிழித்து மரக்கலம் ஒன்று வெளியே வந்தது. மரக்கலத்தின் முனையில் சுவாசிக்கச் சிரமப்பட்டபடி இருந்த வசந்தனின் செவிகளில் கரகோஷங்கள் விழுந்தன. அவன் கண்களைத் திறந்து பார்த்தான். தான் ஒரு மரக்கலத்தில் இருப்பதை அவனால் நம்பமுடியவில்லை. ஒரு பெண் தானே வந்தாள். அவள் எப்படி மரக்கலமாக மாறினாள் என்று எண்ண அவனுக்கு நேரம் கூட போதவில்லை.

வானத்தில் நிலவும் நட்சத்திரங்களும் வெண்ணிற மேகங்களும் தோன்றின. கடலின் நிறம் பழையபடியே மாறியது. பெரிய அலைகள் சிறிய அலைகளாக மாறி, மரக்கலத்தைத் தழுவிச் சென்றது. மற்ற மரக்கலத்தில் இருந்தவர்கள் அவனின் வெற்றியைக் கரகோஷங்களுடன் கொண்டாடினர். அதைப் பார்த்துப் புன்னகை பூத்தபடி தன் மரக்கலத்தின் ஒரு தூணை அணைத்தான்.

அந்த மரக்கலத்தின் முனையில் செல்வம் தோன்றினார்.

"ம்ம்..உத்தரவு கொடு!" என்று கர்ஜித்தார்.

வசந்தனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"கட்டளை இடு!" என்றார் மீண்டும் மிரட்டும் தொனியில்.

"மரக்கலம் புறப்படட்டும்!" என்று உரக்கக் கத்தினான் வசந்தன்.

மரக்கலம் நகரத் தொடங்கியது...

**தேடல் தொடரும்...**

தொடர்கதை முழுவதும் படிக்க URI: http://tamilnanbargal.com/node/52207



# பிரசவத்தில் பிரசவிக்கும் தாய்!!!

சுதா

கம்பனின் கற்பனைக்கெட்டாத
கவியொன்று பூத்தது என்னுள்
கவியே நீ
கண்ணனா !!! கண்ணகியா !!!

ஈருயிர் சுமக்க வைத்து
தாய்மை பட்டம் சூட்டி
பெண்மையை பூர்த்தியாக்கிய
வீர குடி வித்தே !!!

பொதிகை தமிழே
உன்னை உயிரிலே செதுக்கி
உதிரத்தை உணவாக்கி
பத்து திங்கள் காத்தேன் ..!!!

குலம் காக்கும் குருத்தே
குங்கும பூ பாலாம்
இசைகேட்டு நீ துயிலிட
வளைகாப்பு விழாவாம் ..!!!

எட்டி உதைத்து விளையாடி
கருவறையிலே வீணை மீட்டி
சிந்தையை மயக்கிய சிறு தளிரே
ஏங்கினேன் உன்முகம் காண ..!!!

மஞ்சள் திரையிட்டு ஆதவன்
மதி வருகைக்காக மறைந்திருக்க
முகில்கள் முத்தமிடும் மாலையிலே
பெற்றேன் பிரசவ வலியை ..!!!

அக்கணமே மனதில் மழை
இன்ப துளிகள் கண்களில்
சிப்பியின் முத்தாக முகம்காட்டி நீ
அம்மா என்றழைக்க வருவதையெண்ணி !!!

வலியின் வன்முறையில்
ரணம் தேகத்தை தீயாக்கி
உயிர் நாடியை இறுக்கி
ஆன்மாவை ரணமாக்கியது ..!!!

அந்நொடியில் இரத்த திலகமிட்டு
நவ ரத்தினமாய் உதித்தாய்
கீதத்தோடு உன்பிஞ்சு விரல்கள்
எனைத்தீண்டியதும் நானும் பிரசவித்து ..!!!

அள்ளி அணைத்து முத்தமிட்டேன்
அங்கமெல்லாம் என் உயிர் தங்கமே .
அங்கமானாய் அம்மாவின் வாழ்வில் ..!!!




# ஆதலால் காதல் செய்வீர் அன்னை மொழியை

சுதா

**தமிழா நான் ..!!!**

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே
முன் தோன்றிய மூத்த குடியில் பிறந்து
அகத்தியனின் ஞானம் பெற்று ..!!

பிள்ளைத்தமிழில் தாலாட்டி
அவ்வை மடியில் தவழ்ந்து
நெல்லியூட்டி வளர்த்தான் அதியமான் ..!!

முச்சங்கமிட்டு முக்கனி சுவையுடன்
முதறிஞர்களால் முத்தமிழாக முடிச்சூடி
கரைபுரண்டேன் காவேரி அன்னையாக ..!!

மூவேந்தர்களின் வாளில் திலகமாகி
ஈழம் தொட்டு இமயத்தில் கொடிநாட்டி
வங்காளயெல்லை தாண்டியது வீரம் ..!!

திரிகடுகத்தில் தீரா நோய் தீர்த்து
கம்பரின் கற்பனைக்கு காதலியாகி
விடுதலை வேங்கையானேன் பாரதியால் ..!!

வள்ளுவனால் உலகப் பொதுமறையாகி
வீரமாமுனிவரால் பாரெங்கிலும் பவனிகொண்டு
வான் புகழ் அடைந்தேன் நேற்றுவரை..!!

**தமிழா இன்று ..!!!**

அலமாரியில் உறங்குகிறேன்
அரசியலுக்கு விளம்பரமாகி
ஊடகத்தில் கற்பையிழக்கிறேன் ..!!

விதவையாக்கி விளையாடுகிறான் அந்நியன்
அனாதையாக மாண்டுபோகிறேன் வீதியிலே
ஈழத்தில் எம் மங்கையர் போல ..!!

**தமிழா நாளை ..!!!**

ஆங்கிலத்துடன் கலப்பு திருமணமாகும்
தமிழில் பேசினால் பரிசென்பார்கள்
அருங்காட்சியகத்திலே காட்சியளிப்பேன் ..!!

மலட்டு மொழியென பட்டம் பெற்று
தூசு படிந்து கரையானுக்கு இரையாவேன்
ஈழத்தில் எம்மினத்தைப் போல ..!!

நீ அன்னியமொழிக்கு அடிமையாகி
முகவரியிழந்து மூழ்கிவிடுவாய் இலமூரியாவாக
ஆதலால் காதல் செய்வீர் அன்னை மொழியை ..!!

# திசை மாறுமோ

Kirikasan **பகுதி 4 . கயமை தெளியுமா?**

**ஊரின் மத்தியில் :**

*மாவிலைத் தோரணம் மங்கல இன்னிசை
மன்னவன் மாளிகைமுன் - பல
பூநறு வாசமும் புன்னகை யும்கொள
பூரிப்பில் நின்றவர்கள் - சில
ஏவல்கள் வேலைகள் இன்பநல் நாட்டியம்
இத்தனைக் கும்நடுவே - பல
நாவது செந்தமிழ் மீது பகைகொண்டு
நீசமுரைத்திடக் காண்*

*வென்றோம் அவர்நிலம் என்றோர் உரமிட
வீதியில் கூத்திடுவோர் -இதோ
கொன்றோம் எனக் கூறிக் கூத்திடுவோர் கரம்
கொட்டி சிரித்தனர்காண் - நற்
சான்றோர் கூடும் சபை சட்டதுறைகளும்
சோர்ந்தே வெறுமைகொள்ள - அந்தத்
தேன்தமிழ் பேசிடும் நாட்டினை வென்றவர்
தீமை இழைத்துநின்றார்*

*வாசலி டைசில வண்ணப்ப தாகைகள்
வானென் றழைத்திருக்க - சொந்த
பேசுந்தமிழ் அதிலில்லைப் பிறன்மொழி
பூசிக் கிடந்தன காண் - இவர்
நேசமு டைத்தவ ரல்லர் பகைவரும்
நீதியற்றோர் அரசின் முடி
ஆளும் வகையினில் ஆடிடும் பொம்மையில்
ஆட்சி அமைத்துவிட்டார்*

*தீங்கிளைக்கும் பகை யோடு நலன்பெற
தோள் கொடுத்தே சிலரும் - கூடி
ஆங்கிருந் தார்அவர் ஆனந்த போதையின்
ஆழமும் காணநின்றார் - இனி
பூங்குயில் கானமும் புத்தொளி வண்ணம்
போதை கொள் மஞ்சமதில் இவர்
தூங்கியெழச் சுக தோரணம், மாலைகள்
தூவிக்கிடந்தன காண்*

✡ ✡ ✡

**சில மைல்களுக்கப்பால் :**

*உருள் பெரு ஊர்திகள் உளமது கிலிபட
ஊரினுள் நுழைவதையும்
தெருமுழு பேரணி தமிழல்ல யாரெனத்
தவித்தனர் தமிழ்க்குலமும்
ஒரு பெரு அழிவென உணர்வுகள் உறுத்திட
உயிர்ப்பய உணர்வெழவே
பரிவினை விரும்பியும் பலதலைவரின் விழி
பதிவொளி தனை இயக்க*

*விதி எனும் கருமுகம் கொடுமைகள் விளைத்திட
வழிந்தன வியர்வையல்ல
சதிபதியுடன் தவழ் குழந்தைகள் குரலற
செறிந்தன பிணமலைகள்
கதியின்றி நிசப்தமும் கனவுகள் எனவிழி
கணமதில் ஒளிவிலக
மதியுல கதைப் பெரு மதியொடு வலமிடும்
பதிகரு வியில் கண்டார்*

✡ ✡ ✡

**மன்னர் மாளிகையில் :**

*மாங்கனிச் சாற்றினில் தேன்கலந்தோர் மது
ஊற்றும் இதழுடையாள் - எழிற்
பூங்குழல் தான்விரித் தோங்கிடும் புன்னகை
பூத்தவள் மன்னவனின் - அயல்
மூங்கிலின் பொன்னெழில் மேவுகரத்துடன்
மெல்லென ஊட்டிவைக்க - கரம்
தாங்கிஒரு பெண்ணும் சாமரை வீசிடும்
தன்மையைப் பேணிநின்றாள்*

*ஆனந்த போதையில் வானில் மிதந்தவன்
ஆகாவென விழிகள் - இன்ப
தேனது மாந்தத் திளைத்தவனோ மனம்
தூங்கிக் களித்திருக்க - அயல்
வானது போற்றிடும் மானத்தமிழ்மகன்
வந்துகை கட்டி நின்றான் - என்ன
ஆனது வீரமோ தொன்மைக்கலி புறம்
தானெடு மார்புடையோன்*

*கூனலில் நெஞ்சுங் குறுகி வளைந்திடக்
காலடி நின்றவன்காண் - தமிழ்
மானமும் விட்டவன் மஞ்சத்தில்; தூங்கிட
மாறிக் கிடந்தவனும் -அந்த
ஆனந்த வேளையில் கூச்சலும் சத்தமும்
அண்மை எழுந்துவர - என்ன
ஆனது எண்ணிட முன்னர் விரைந்தொரு
ஆபத்தென உணர்ந்தான்*

*கொல் லுடன்கொல் எனக் கூவித்துடித்தனர்
கொன்று இனமழிப்போர் அட
நில்லென உள்ளமும் சொல்லிடும்போதிலும்
நிர்க்கதி என்றுணர்ந்தான் - இவர்
வெல்லென வீணரை வேண்டிஉதவிய
வெற்று மதியூகத்தை என்றும்,
கொல்லுமினம் தன்னைக் கொள்கை சிதைவுறக்
கொல்வரோ எண்ணிநொந்தான்*

✡ ✡ ✡

# இன்பமெனும் ஓடம், இன்னலின் மேல் ஆடுதடீ!

Sundar_Purushothaman

இனிய நிகழ்வுகள் எப்போதும் வாய்ப்பதில்லை - இருப்பினும்,

வறண்ட வனம்தனில் தென்றலாய்

சிலகணமது நம்முன் வீசத்தான் செய்கிறது!

இனிய நிகழ்வுகள் எல்லோர்க்கும் வாய்ப்பதில்லை-என்றாலும்,

இலையில் வைத்த இரண்டாவது இனிப்பைப்போல்

சிலமுறையது நம்மை சிலிர்க்கவும் செய்கிறது!

கனியது இனிக்குமென்றெண்ணிச் சுவைக்கின்றோம்..

வாயில் வைத்தது எட்டிக்கனியாகிறது!

பிணிதான் இனியென எண்ணித் துன்புறுவோம்,

வருவதறியாமல் வரம் நம்மைச் சேர்கிறது!!

உரமென் னறிவென எண்ணித் திளைத்தவன்,

துவள்கிறேனிது ஏட்டுச்சுரைக்காய்!

மரம்தான் நானும்! மண்ணெந்தன் மூளை!!

இடியொன்று தாக்கிபின்

இளைப்பாறலில்லாத காலத்தில்,

மடியொன்று வந்ததுநான் தலைவைத்துறங்க!!

இரத்தம் வழியும் காயத்தில், இறகால் வருடின மருந்தது!

சத்தமின்றி அழுகின்றேன்...

எச்சமது துன்பத்தின் ஊறலா? இன்பத்தின் சாரலா!?

பாகற்காயொடு பச்சடிபோல்-அதன்

கதம்ப உணர்வைக் கட்டுரைக்க இயலவில்லை!

பாலினும் தூயதாய் பாசத்தைக் கண்டேன்!

அதைப் பெற்றிடும் கலயம்நான் கழுவப்படவில்லை!!

இன்னலின் சோகம், இன்பத்தில் சாகும்!

இவ்வின்னலோடின்பம் எப்போது சாகும்?!

முக்கண் முதல்வன்,

கண்களிரண்டிலும் கரந்தது இன்னலோ?! -அவன்,

நுதற் கண்ணைப் பிறையளவே திறந்தானோ?

அதை முழுதாய் திறந்தெந்தெந்தன் துயரத்தைத் துடைப்பானோ?

## மனிதனாக வேண்டும்!!!

*உடனே கவிஞனாகி*
*உலகைத் திருத்திட*
*தீர்மானித்தேன்!*

*சிந்தனைக் கடலில் மூழ்கி*
*கருத்து முத்துக் குளிக்க*
*நான் எத்தனித்தபோது....*

*மனசாட்சியாம்*
*கலங்கரை விளக்கக் கதிர்கள்*
*என்மீது பட்டன!*

*அந்த ஒளியிலே*
*என்னை நான் பார்த்தேன்!!*

*அப்போது உணர்ந்தேன்,*
*"கவிஞனாக முதலில்*
*மனிதனாக வேண்டும்"!!!*

*பால குருசாமி*

# யாரோ போட்ட வாந்தியில்.

nandagopal.d



*தேநீர் இடைவேளையின்
பரபரப்பு நேரமொன்றில்
தேநீர் அருந்த வந்து
அதற்க்கு முன்பு
தாகத்திற்கு தண்ணீர் குடிக்க
எத்தனித்த பொழுது குழந்தையின்
எச்சில் பட்ட தண்ணீர் என்று
முகம் சுளித்து டம்பாளரை
இரண்டு முறை கழுவி விட்டு
குடித்த அந்த மனித நாக்கு*

*கதிரவனின் மறைவிற்கு பின்
வெகு நேரம் கழித்து
கை பிடியில் சிக்கிய
மது கோப்பையில்
கடைசி ரச சொட்டில்
எங்கோ கழிவுகளில்
அமர்ந்த ஈ ஒன்று
விழுந்து இருந்ததை கவனித்தும்
எதையும் சுளிக்காமல்
ருசித்தது
அந்த சொரணை கெட்ட நாக்கு*

*யாரோ போட்ட வாந்தியில் புரண்ட
ஜடத்தின் வடிவம் வான் வழியே
வாழ்க்கை என்று மூளையற்று
முனகி கொண்டு இருந்தது
முக்கிய வீதியொன்றின் முடிவில்*

*விடியலில் பால் வாங்க வந்த குழந்தை
தன் தந்தையிடம் கேட்டது
" அந்த மாமாக்கு உடம்பு
சரி இல்லையாப்பா என்று"*

# தாய் ஒருத்தியை தேடும்.

kalpana.bharathi



*கணவன்மார்களே மனைவிமார்களே
கரமொன்று வரமாகக் கிடைக்காதா என்று
காத்துக் கிடக்கின்றன காப்பகத்தில்
மழலைச் செல்வங்கள்
பால்மணம் மாறிடும் பல் முளைத்திடும்
தவழ்ந்திடும் தத்தி நடந்திடும் ஓடிடும்
ஓடி விழுந்திடும் அழுதிடும்
அள்ளி அணைக்கியிலே மலர்ந்து சிரித்திடும்
கர்பத்தில் தரிக்கவிட்டால் என்ன
காப்பகத்தில் பெற்றால் என்ன
மாசற்றதடி மழலையின் முத்தம் !*

*கையாட்டி கூப்பிடுதடி
கைகொட்டிச் சிரிக்குதடி
தாவி வருகுதடி
தாய் ஒருத்தியைத் தேடுதடி
கண்மணியே கனி அமுதே என்று
கட்டி அணைத்திட தவிக்குதடி !*

*தாயாகிட தவமிருந்தது போதும்
ஆழ்கடல் அலையில் நீராடியது போதும்
ஆலயம் நூறு வலம் வந்தது போதும்
அணைத்திடும் கரங்கள் அன்பு ஆலயம்
அங்கே மழலை தெய்வம் !
தாய்மை ஒரு ஆராதனை !*

# பில்லா III: பில்லா Vs டிராகுலா - 7

Sivaji dhasan




**பகுதி - 7**

விதி என்றுமே மனிதர்களை விரட்டிக்கொண்டிருக்கும் சாட்டை. அதிலிருந்து யாரும் தப்பியதில்லை. பணக்காரனிலிருந்து பாமரன் வரை ஆட்டுவிக்கும் வல்லமை கொண்டது அது. இது வரை வெற்றியை மட்டுமே சுவாசித்துக்கொண்டிருந்த பில்லாவுக்கு தோல்விகள் கம்பளத்தை விரித்து வரவேற்றன. கசாப்புக் கடைக்காரனுக்கு ஆட்டின் மேல் பாசம் வந்தால் அவனால் கத்தியை ஓங்க முடியுமா? கடத்தல் தொழிலால் தன் உயிருக்கு ஆபத்து என்றிருந்தாலும் எதிர்த்துப் போராடியிருப்பார். ஆனால், ஒரே மகனின் உயிர் ஊசலாடும் சமயத்தில் சாதாரணத் தந்தையாக மாறிப்போனார்.

இவற்றையெல்லாம் சிந்தித்தபடி பில்லா டாக்ஸியில் சென்றுகொண்டிருந்தார். சாலையில் உள்ள மின்விளக்குகள் அவரைக் கடந்துகொண்டே போயின. நீண்ட பெருமூச்சை விட்டெறிந்தபடி தனது செல்பேசியை எடுத்து யாருக்கோ கட்டளையைப் பிறப்பித்தார். பிறகு, செல்பேசியை அணைத்து தன் கால்சட்டைப் பையிலிருந்த ஒரு சிறு துப்பாக்கியை எடுத்தார். அதில் தோட்டாக்கள் சரியாக உள்ளதா என்று பார்த்தார். அதை மீண்டும் கால்சட்டைப்பையில் போட்டுக்கொண்டு இருக்கையில் சாய்ந்து கண்களை மூடி மனதில் பட்ட ரணத்தை மறக்கப் போராடினார்.

வானில் உள்ள கருமேகங்களின் குழந்தைகளான மழைத்துளிகள் சிறு தூறலால் பூமியை நனைத்தது. தான் உட்கார்ந்திருந்த இருக்கையின் பக்கவாட்டில் உள்ள கண்ணாடியில் தண்ணீர் வழிந்துகொண்டிருந்ததை வெறித்த பில்லாவின் மனது சற்று நிம்மதி அடைந்தது என்றே சொல்லலாம். எவ்வளவு பிரச்சனைகள் இருந்தாலும், யாரும் தொல்லை செய்யாமல் யாருமற்ற சாலையில் பேருந்திலோ அல்லது காரிலோ அமைதியாக செல்லும்பொழுது பிரச்சனைகள் மறைந்துவிட்டதாக ஒரு பிம்பம் தோன்றும். ஆனாலும் பில்லா ஒரு விஷயத்தைச் செய்வதற்கு சித்தமாகிக்கொண்டிருப்பதை அவரது கூரிய கண்கள் கூறின.

பாரிஸில் உள்ள அந்த பிரதான சாலையில் டாக்ஸி சென்றது. டிரைவரின் கைகள் ஸ்டியரிங்கைப் பிடித்தபடி நடுங்கிக்கொண்டிருந்தன. அவ்வளவு மோசமான இடம் விக்டரின் வசிப்பிடம். கொலைகள் எல்லாம் காலை உணவு சாப்பிடுவது மாதிரி சர்வ சாதாரணமாக நடக்கும். போலிசும் பெரிய நடவடிக்கைகளை எடுக்காது.

> *காதல்*
>
> *பைத்தியம் போல . . .*
>
> *எல்லோருக்கும் பிடிப்பதும் இல்லை..*
>
> *பிடிப்பதும் இல்லை.....*
>
> *தமிழரசி*

அப்போது, அந்தச் சாலையில் ஒரு காட்சி நடந்தது. நான்கைந்து பேர் ஒருவனை தாக்கிக்கொண்டிருந்தனர். தாக்கப்பட்டவன் வலியால் துடித்து, தப்பிக்க வழி தெரியாமல் தவித்துக்கொண்டிருந்தான். அது போன்ற ஒரு சம்பவமே நடக்காதது போல் பில்லா விக்டரின் வீட்டை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்.

சிறிது நேரத்தில், ஒரு பெரிய வீட்டு கேட்டின் முன் வண்டி நின்றது. பில்லா இறங்கினார். டிரைவரின் முகமோ வாடிப் போன கத்தரிக்காய் போலிருந்தது. திரும்பி எப்படி இவ்விடத்தைக் கடக்கப் போகிறோமோ என்கின்ற பயம் அவரின் இதயத்துடிப்பை அதிகப்படுத்தியது.

விக்டர் வீட்டு கேட்டின் முன், சில பேர், தூங்கிக்கொண்டிருப்பவர்களைத் தூக்கிக்கொண்டு செல்வதைப் போல் தெரிந்தது. முதலில் அப்படி நினைத்த டிரைவர், பிறகு செயலற்றுப் போனார். அவர்கள் தூங்கிக்கொண்டிருக்கவில்லை. இறந்துவிட்டதாக உடலிலிருந்து வெளியேறிய ரத்தம் சொன்னது. டிரைவருக்குப் பயத்தில் வேர்த்துக்கொட்டியது.

ஆனால், பில்லா எவ்வித சலனமும் முகத்தில் காட்டாமல் "எவ்வளவு தரணும்?" என்றார்.

அவர் குரலில் உள்ள இரும்புத்தன்மையில் டிரைவரின்

உடல் செயல்படத் துவங்கியது போல பில்லாவை நோக்கினான். எங்கோ தூரத்திலிருந்து பேசுவது போல் மெல்லிய குரலில் பயத்தை கலந்து பார்வையில் மிரட்சியுடன், "ஐம்பது யூரோ சார்" என்றான்.

# விலையேற்றம்

கவியாழினி



*ஓலை வீட்டில் இருந்தாலும்*
*ஒய்யாரமாய் நான் வாழ்ந்தேன்*
*ஒரு பிடி உண்பதற்கும் என்னை*
*ஒருமுறை கடித்து உண்பான்*

*உழைத்து வருபவனின் உடல்வலியையும்*
*என்னை ரசித்து சாப்பிட மறந்துபோவான்*
*இன்று எட்டிநின்று என்னை வேடிக்கை*
*பார்த்து விரைந்து செல்கிறான்*

*பணம்படைத்தவன் வாங்குகிறான்*
*மனம் வதங்க அறையில் கொட்டிவைக்கிறான்*
*குளிர்பதன பெட்டியில் போட்டு*
*என்னை கண்டபடி வாட்டுகிறான்*

*ஏழை என்னை உரிக்கையிலே கண்ணில்*
*கண்ணீர் வர வைத்தேன் நான்*
*இன்று அவன் என்னை தூரமாக*
*நினைக்கயிலே கண்ணீரில் நான் தவிக்கிறேன்*

*இந்த விலையேற்றம் எனக்கு வேண்டாமே*
*என்னை சுற்றி அன்பானவர்கள் காணோமே*
*என் விலையையும் இறக்கிடுங்க எனக்கு*
*பிடித்த இடத்தில் என்னை சேர்த்திடுங்க*

***இப்படிக்கு நானுங்க வெங்காயமுங்க...***

பில்லா தனது பாக்கெட்டில் கைவிட்டு நூறு யூரோவை அவனுக்கு கொடுத்து விட்டு விக்டரின் வீட்டினுள் நுழைந்தார். சிறிதும் தாமதியாமல் டாக்ஸியைக் கிளப்பிக்கொண்டு சென்றான் அவன்.

பில்லா உள்ளே சென்றதும், ஒருவன் அவரின் முன் வந்தான்.

"எல்லாம் சரியாத்தானே இருக்கு?" என்றார் விக்டரின் வீட்டினுள் எரியும் விளக்கைப் பார்த்தபடி.

"காவலிருந்த எல்லோரையும் கொன்னுட்டோம் சார். இன்னும் வீட்டுக்குள்ள போகல. இங்க நடந்தது யாருக்கும் தெரியாது" என்றான்.

விக்டரின் வீட்டிற்குக் காவல் புரிந்திருந்த ஆட்களின் இறந்த உடல்களை நோக்கிவிட்டு வீட்டிற்குள் தனியாகச் சென்றார் பில்லா. அவரது நடையில் வேகம் கூடியது. கொலைவெறி அவர் மனதைப் பாறைபோல் ஆக்கி முகத்தை இறுக்கமாக்கியது. கையில் துப்பாக்கியை ஏந்தியபடி வீட்டின் மாடிப்படியில் ஏறி விளக்கு எரிந்துகொண்டிருக்கும் அறையின் கதவைத் திறந்தார்.

அங்கே விக்டர் இல்லை. அவன் மனைவியும் ஐந்து வயது மகளும் நடப்பவை ஏதும் அறியாமல் உறங்கிக்கொண்டிருந்தனர். பில்லா சிறிது தடுமாறினார். இவ்வளவு அழகான மனைவி, குழந்தையுடைய தந்தையைக் கொல்லத்தான் வேண்டுமா? என்று கூட எண்ணினார். திடீரென்று, அவரின் மனதில் டிராகுலா அவரை அலையவிட்டது நினைவில் துளிர்த்தது. மீண்டும் இறுக்கமான முகத்துக்கு மாறி கதவை ஓசை எழுப்பாமல் மூடினார்.

அடுத்த அறையின் கதவைத் திறக்கக் கைவைத்தார். அது உள்ளே பூட்டப்பட்டிருந்தது. தன்னுடைய துப்பாக்கியை சாவித் துவாரத்தில் வைத்துச் சுட்டார். சைலென்சர் பொருத்தப்பட்டிருந்த துப்பாக்கி என்பதால் சிறிய சத்தம் தான் எழுந்தது. கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றார்.

விக்டர் உறங்கிக் கொண்டிருந்தான். மூன்று பேர் படுக்க வேண்டிய படுக்கையில் அவன் ஒருவனே படுத்து நிம்மதி உறக்கத்தை ரசித்துக்கொண்டிருந்தான். அவன் தலைமாட்டு சுவரில் ஓர் ஓவியம் தொங்கவிடப்பட்டிருந்தது. சிறு மஞ்சள் வெளிச்சம் மட்டுமே அவ்வறையில் இருந்தது. பில்லா சில நிமிடங்கள் அவனை உற்றுப் பார்த்துவிட்டு துப்பாக்கியின் குழலால் அவனைத் தொட்டு எழுப்பினார்.

"விக்டர்..விக்டர்" என்றார்.

ஒரு சிறு முனகலுடன் கண்களில் படர்ந்திருந்த சோம்பலைத் துடைத்தபடி, "யாரது?" என்று நோக்கினான். பில்லாவைக் கண்டதும் அவனது புருவங்கள் மேலெழுந்து, "இங்கே எப்படி?" என்று கூற விழைகையில் ஒரு தலையணையை எடுத்து அவன் முகத்தில் புதைத்து துப்பாக்கியால் தலையணையில் மூன்று முறை சுட்டார். அவனது உடல் மூன்று முறை துடித்து அடங்கியது. முதல் தொட்டாவிலேயே விக்டர் மாண்டு போனாலும் தன் வெறி தீர இரண்டு

தோட்டாக்களை வீணடித்தார் பில்லா.

கீழுதட்டைக் கடித்தபடி அறையை விட்டு வெளிவந்து விக்டர் மனைவியின் அறைக் கதவைத் திறந்து அவர்கள் இன்னும் தூங்குகிறார்களா என்று பார்த்தார். அவர்களின் உறக்கம் கலையவில்லை என்பதைத் தெரிந்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டார். வீட்டு வாசலைக் கடந்து கேட்டை நோக்கி நடக்கையில் பில்லாவின் செல்பேசி அலறியது. எடுத்து காதில் வைத்தார்.

"என்ன பில்லா?" என்ற குரூரக் குரல் அவரின் கோபத்தீயைக் கிளறியது. "நான் விரிச்ச வலையில விழுந்திட்டீங்களே பில்லா. நான் விக்டருக்கு வேலை செய்றேன்னு நினச்சி இந்நேரம் நீங்க அவனை கொன்னுருப்பீங்களே" என்று பரிகாசமாகக் கூறினான் டிராகுலா.

பில்லா சலனமற்ற முகத்தை மாற்றாமல் ஓரிடத்தை வெறித்தபடி அவன் பேசுவதைக் காதில் விழுங்கிக்கொண்டிருந்தார்.

"நான் உங்க கூட கொஞ்சம் விளையாடினேன் பில்லா. விக்டருக்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் இல்ல. நீங்க கொஞ்சம் யோசிச்சிருந்தா விக்டர் உயிரோடு இருந்திருப்பான். உங்க கடத்தல் சரக்க போலீஸ் விக்டர் கேரேஜ்ல பிடிச்சிருக்காது. நாளைல இருந்து நீங்க போலிசால தேடப்படமாட்டீங்க. ஆனா நிலைமை கைமீறிப் போயிடுச்சே" என்று சிறிது இடைவெளி விட்டான்.

பில்லா அமைதியாக இருந்தார். பேசவில்லை. முக இறுக்கம் மட்டுமே தொடர்ந்தபடி இருந்தது.

"என்னுடைய ஆட்டம் ஆரம்பிச்சி நல்லா ஆடிட்டு இருக்கேன். நீங்க இன்னும் ஆரம்பிக்கலையே. சீக்கிரம். நான் காத்திட்டு இருக்கேன்" என்று சிரித்தபடி துண்டானது இணைப்பு.

பில்லா கேட்டைத் தாண்டி நடந்து தன் ஆட்கள் கொண்டு வந்த காரில் ஏறிச் சென்றார்.

> *உனக்காக காத்திருப்பேன்*
>
> *நீ வரும்வரை அல்ல*
>
> *நான் போகும்வரை..*
>
> *உன்னை விட்டு அல்ல*
>
> *உலகத்தை விட்டு...*
>
> *அனீஸ் ராஜ்..*

★ ★ ★

அடுத்த நாள் காலை, மக்களின் கையில் ஃபிரான்ஸ் டெய்லி நியூஸ் என்கின்ற பத்திரிக்கையில் பில்லா ஓட்டிய வண்டியும் அதில் உட்கார்ந்திருந்த பில்லாவின் படமும் சூடான செய்தியாக மாறி மக்களிடம் பரவலாகப் பேசப்பட்டன. பில்லாவை ரகசியமாகத் தொடர்ந்துகொண்டிருந்த திவாகர் புகைப்படம் எடுத்து அதைப் பத்திரிக்கைக்குக் கொடுத்து பணத்தைப் பார்த்துவிட்டான். அந்தச் செய்தி அடங்கும் வேளையில் போலீஸ் பில்லாவின் வீட்டை முற்றுகையிட்டது.

அசிஸ்டன்ட் கமிஷனர் ஆன்சன் பில்லாவைக் கைது செய்ய வீட்டினுள் நுழைந்தார். சத்யம் மட்டுமே இருந்தார். பில்லாவைக் காணவில்லை. பில்லா இரண்டு நாட்களாக வரவில்லை என்றார். வீட்டினுள் போலீஸ் நுழைந்து இண்டு இடுக்கெல்லாம் தேடியது. அவரது தொழிற்சாலைகளிலும் ஹோட்டல்களிலும் கூட போலீஸ் தேடிக் களைத்து விட்டது. பில்லா இருக்கும் இடம் யாருக்கும் தெரியவில்லை.

பில்லா ரகசியமாக ஓரிடத்தில் நன்றாக இருக்கிறார் என்று மட்டும் ஆன்சனுக்குத் தெரியும். பில்லா ஓடி ஒளிந்ததை எண்ணி அவர் மனதில் சிறு மகிழ்ச்சி. விக்டர் கொல்லப்பட்டது, விக்டரின் கேரேஜுக்கு பில்லா கார் ஓட்டிச்சென்றது, இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது பில்லா தான் கொலை செய்திருப்பார் என்ற எண்ணத்திற்கு வந்தார் ஆன்சன். ஆதாரமாக செய்தித்தாளில் வந்த புகைப்படம் அவருக்கு எல்லையில்லா மகிழ்ச்சியை அள்ளித் தந்தது. பில்லாவைக் கைது செய்துவிடலாம் என்று ஆசைப்பட்டது தான் நிராசையானது. ஆனாலும் பல நாள் திருடன் ஒரு நாள் அகப்படுவான் என்கிற பழமொழிக்கு ஏற்ப என்றாவது ஒரு நாள் பில்லா பிடிபடுவார் என்று மனதிற்கு ஆறுதலைத் தேடிக்கொண்டார்.

★ ★ ★

கடலில் ஒரு சிறிய கப்பலில் சாதாரண உடையணிந்து மாஃபியா கூட்டத்தின் தலைவர் ஜோசப் உட்கார்ந்து எல்லையில்லா பரப்பளவு கொண்ட நீலக் கடலை வெறித்தவண்ணம் ஓய்வெடுத்துக்கொண்டிருந்தார். அவ்வப்போது தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டார். அது யாருக்கோ அவர் காத்திருப்பதை உணர்த்தியது. நேரம் கடந்து கொண்டே சென்றது. கடல் அலைகளின் இரைச்சலில் சற்று கண் அயர்ந்துவிட்டார்.

அப்பொழுது, ஒரு ஸ்பீட்போட்டின் என்ஜின் சத்தம் அவரை உறக்கத்திலிருந்து எழுப்பியது. பரத் தான் அந்தப் படகில் வந்துகொண்டிருந்தான். கப்பலின் அருகே படகை நிறுத்திவிட்டு கப்பலில் ஏறி ஜோசப்பை சந்தித்தான்.

அவன் வந்ததும் செய்தித்தாளை அவன் மீது வீசினார் ஜோசப். அதைப் பார்த்துவிட்டு இது பழைய விஷயம் என்பதைப் போல் லேசான சலிப்புப் பார்வையை ஜோசப்பிடம் வீசினான் பரத்.

"என்ன நடந்துட்டு இருக்கு?" என்றார் மிரட்டும் குரலில்.

"விக்டரை பில்லா தான் கொன்னுருக்காரு சார். இந்த பேப்பர்ல வந்த செய்தியும் உண்மை தான். ஆனா ஏன் அந்த நேரத்தில அவரே வண்டி ஓட்டிட்டு போனாருன்னு தெரியல. அதை விசாரிக்கணும். இப்போ பில்லாவை போலீஸ் தேடிட்டு இருக்கு. அவர் தலைமறைவாயிட்டாரு . எங்க ஒளிஞ்சிருக்காருனு தெரியல. ஆனா விக்டரை கொன்னதுக்கு ஏதோ காரணம் இருக்குனு எனக்கு தோணுது சார்" என்றான்.

"அன்றைக்கே என் முன்னாடி அவனைச் சுடப் பார்த்தானே"

"இல்லை சார். அது காரணமா இருக்காது. நான் விசாரிக்கிறேன். கொஞ்சம் டைம் தாங்க. எல்லாத்தையும் கண்டுபிடிக்கிறேன்"

"முதல்ல அந்த நியூஸ் ரிப்போர்ட்டரைக் கொன்னுடு. அவன் பெரிய தலைவலியா இருக்கான். பில்லா வேற நமக்கு குடைச்சல் குடுத்துட்டு இருக்கான். அவன் இனி நமக்கு தேவையான்னு யோசிக்க வேண்டியிருக்கு" என்று சிந்தித்தார்.

பரத் சிலையாக நின்றுகொண்டிருந்தான்.

"என் முன்னாடி மரம் மாதிரி நிக்காத. அந்த நியூஸ் ரிப்போர்ட்டரைக் கொன்னுட்டு வந்து பேசு" என்றார்.

பரத் அங்கிருந்து சென்றான்.



சஞ்சயின் மனைவி தன்னுடைய மகன் தர்ஷனை அழைத்துக்கொண்டு "வீனஸ் சர்க்கஸ்" க்கு வந்திருந்தார். அப்பா எங்கே? அப்பா எங்கே? என்று உயிரை வாங்கியதால் சமாதானப்படுத்த சர்க்கஸிற்கு கூட்டி வந்தார்.

பெரிய கூடாரம். நடுவே மைதானம் போல் மேடை. சுற்றிலும் வண்ண வண்ண விளக்குகள். அதைப் பார்க்கக் குழுமியிருந்த பார்வையாளர்கள். பார்வையாளர்களை மேலும் பரவசமாகக ஜோக்கர்களின் அணிவகுப்புக்கள். ஜோக்கர்களின் விளையாட்டைப் பார்த்து ஆர்ப்பரித்த குழந்தைகள் என எண்ணற்ற பேர் அங்கே கூடியிருந்தனர்.

கையில் ஐஸ்கிரீமை ருசி பார்த்தபடி சர்க்கஸை ரசித்துக்கொண்டிருந்த தர்ஷன் லேசான தடுமாற்றத்திற்கு உள்ளானான். மேடையில் ஒரு ஜோக்கர் ஒற்றைச் சக்கர சைக்கிளை வித விதமாக ஓட்டியபடி வித்தை காட்டிக்கொண்டிருந்தார். அவரைப் பார்த்த தர்ஷனுக்கு தன் வீட்டுக்கு வந்த ஜோக்கர் ஞாபகம் வந்தது. அவரின் நடை, விளையாட்டுத்தனம் எல்லாம் அப்படியே ஒத்துப்போனது. அப்பாவுடைய நண்பர் இவராகத் தான் இருக்கும் என்று முடிவெடுத்தான். இவரைப் பார்த்தால் பில்லா அங்கிள் போன் செய்யச் சொன்னாரே என்று நினைத்தான்.

தன் அம்மாவைப் பார்த்து, "பில்லா அங்கிளோட பேசணும்" என்றான்.

திடீரென்று அவன் கூறியதைக் கேட்டு அதிர்ச்சியடைந்த அவன் அம்மா, "ஏன் அவர் கிட்ட பேசணும்?" என்றார்.

"பேசணும். போன் பண்ணி குடு" என்று அழத் தொடங்கினான் அந்தப் பாலகன்.

வேறு வழி இல்லாத காரணத்தால் குழந்தையைக் கடிந்துகொண்டே பில்லாவின் நம்பருக்கு போன் செய்தார்.

சில நொடியில் "ஹலோ" என்றது ஓர் ஆண் குரல்.

"ஹலோ" என்று கூறி பின், தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு, "டேவிட் சார் இருக்காரா?" என்றார் சஞ்சயின் மனைவி.

"அவர் இல்லையேம்மா" என்றார் மறுமுனையில் பேசிய சத்யம்.

"தர்ஷன் தான் பேசணும்னு சொன்னான். அவன் கிட்டேயே சொல்லிடுங்க" என்று போனை தர்ஷனிடம் கொடுத்தார்.

"ஹலோ" என்றான் தர்ஷன்.

"சொல்லுடா குட்டிப்பையா. பில்லா அங்கிள் இப்போ ஊருல இல்ல. அவர் வந்ததும் உன்கிட்ட பேசச் சொல்றேன் சரியா?"

"அப்படியா தாத்தா? சரி, அவர் என்கிட்டே ஒண்ணு சொல்லச் சொன்னாரு. அதை சொல்லிடுங்க. அவர் தேடுற ஜோக்கர் அங்கிள் 'வீனஸ் சர்க்கஸ்'ல இருக்காரு. அவரு பச்ச கலர் ஜோக்கர் பேண்ட்டும் மஞ்ச கலர் கோடு போட்ட சட்டையும் போட்டுட்டு இங்க சைக்கிள் ஓட்டிட்டு இருக்காரு" என்றான் மழலை மொழியில்.

சத்யமுக்கு இன்ப அதிர்ச்சியாகிப் போனது. உடனே அழைப்பைத் துண்டித்து பில்லாவைப் பார்க்க ஓடினார்.



தர்ஷன் கூறிய அந்த ஜோக்கர் மனிதன் சில

மாதங்களுக்கு முன்னால் தான் அந்த சர்க்கஸில் வேலைக்குச் சேர்ந்தான். அவன் காட்டும் வித்தையில் குழந்தைகள் குதூகலமாகியதில் அதிக சம்பளம் கொடுத்து வேலைக்கு வைத்துக்கொண்டார் முதலாளி. இது நாள் வரை யாரிடமும் பழக்கம் ஏற்படுத்திக்கொள்ளாமல் தான் உண்டு தன் வேலையுண்டு என்று இருந்தான். ஷோ முடிந்ததும் அங்கிருக்காமல் கிளம்பிடுவான் அவன். அவன் நல்ல வித்தைக்காரன் என்பதால் முதலாளியும் அவனைக் கண்டுகொள்ளவில்லை.

இரவு ஷோ முடிந்து ஜோக்கர் வேஷத்தைக் கலைக்காமல் சுட்டிக் குழந்தை போல் நடந்து வெளியே வந்தான். மின்விளக்கின் வெளிச்சத்தில் தன் இருசக்கர வாகனத்தை அடையாளம் கண்டு சிரித்தபடியே நடனமாடிக்கொண்டே சென்றான்.

சுற்றியிருக்கும் கட்டடங்களின் ஜன்னலின் வழியே பல துப்பாக்கிக் குழல்கள் அவனைக் குறிபார்த்தன. அவன் அருகே பல கார்களில் பில்லாவின் ஆட்கள் கண்காணித்துக்கொண்டிருந்தனர்.

நிலைமை சரி இல்லை என்பதை நொடிப் பொழுதில் உணர்ந்துகொண்ட ஜோக்கர், எல்லோரையும் பார்த்து நமட்டுச் சிரிப்பு சிரித்து சின்ன குலுக்கல் நடையோடு பைக்கில் ஏறிப் பறந்தான். பல கார்கள் அவனைத் துரத்தின. கார்களின் ஹெட் லைட் வெளிச்சம் அவனைச் சரியாகப் படம் பிடித்தது.

அவன் பின்னே திரும்பி, கூசும் வெளிச்சத்தை நோக்கிவிட்டு தன் பைக்கை மேலும் வேகப்படுத்திச் சென்றான். நாலாபுறமும் கார்கள் சூழ்ந்தன. ஒரு கார் அவன் பைக்கை வேகமாக முட்டியது. பைக் ஒரு பக்கம் அவன் ஒரு பக்கம் என தூக்கியெறியப்பட்டனர்.

சுற்றியெங்கும் இருள். காரின் வெளிச்சத்தில், அவன் விழுந்திருப்பதை எல்லோரும் பார்த்தபடி காரில் இருந்து இறங்கினர்.

**தொடரும்...**

தொடர்ந்து படிக்க URI:
http://tamilnanbargal.com/node/52686

# பழமை என்றால் சிறுமையோ ...?

கே இனியவன்



வாடி
விழுந்த மலரொண்டின்
சோகக்கதை கேளீர்
வாடி விழுந்தது என் குற்றமா ..?
தாங்கி வைத்திருந்த காம்பு
தள்ளி விட்டது குற்றமா ...?
இளமையாக இருந்த போது
உவமைக்கு என்னை
பயன்படுத்திய - கவிஞரே
பதில் கூறுங்கள் .....!!!

தேய்ந்து
அறுந்த செருப்பொன்றின்
சோகக்கதை கேளீர்
தேய்ந்தது என் குற்றமா ..?
தேய்த்தவர் கால் குற்றமா ...?
என் சோடியை இழந்த நான்
தெருவோரத்தில்
வீசப்பட்டுள்ளேன் - தவிக்கும்
என் மனசை யாரறிவார்
பராபரமே ....!!!

கிழிந்த சட்டையின்
சோகக்கதை கேளீர்
கிழிந்தது என் குற்றமா ...?
கிழிக்க வைத்த உடலின்
வியர்வை குற்றமா ...?
உடலுக்கு அழகுசெய்த
என் வாழ்க்கை இப்போ
துடைப்பு துணியாக
மாறிவிட்ட என் வாழ்க்கை ...!!!

பழமையானால் பாராமுகம்
காட்டும் எம் சமுதாய
பாரம் பரியம் - இதில் மட்டும்
பழமை பேணும் கோட்பாட்டை
காலத்தால் கடைப்பிடிப்பது
விந்தையிலும் விந்தைதான் ...!!!




# மௌனங்கள் உயிர்த்தெழுந்தால்

## பகுதி 21

மணிகண்டன்

இரவினில் நீ விழி மூடி தூங்கும் அழகினை
சாளரத்தின் வழியே விழி துளைத்து
இதயம் தொலைத்த விண்மீன்கள்
கவிதை படைக்க என்னை துணைக்கு அழைக்கின்றன !

என் உள்ளங்கையதனில் உந்தன் கையெழுத்தினோடு
கைவிரல் ரேகையும் பதிய வாழ்த்து சொல்லும்
எந்தன் பிறந்தநாளினை வருடம் முழுவதும் கொண்டாடிட
அனைத்து நாள்காட்டியோடும் பேசி வருகிறேன் !

எனது நினைவு வரும்போதெல்லாம்
உனக்கனுப்பிய கவிதைகளை படிக்கிறேன் என்றாய்
உனது விழியின் பிரதிகளைதானே கவிதையாக்குகிறேன்
அதை அதே விழிகளால் மீண்டும் புசிப்பதும் ஓர் அழகுதான் !

உனது இமையிலிருந்து உதிர்ந்த மயிரொன்றை
வண்ணத்துப்பூச்சிகள் புடை சூழ
தங்க பல்லக்கில் நந்தவனத்திற்கு கொண்டு செல்கிறது!
ஒரு வண்ணம் கொண்ட முடியினோடு பல வண்ணம் கொண்ட
வண்ணத்துப்பூச்சிக்கென்ன காதலோ !

நேற்று காலை பூங்காவில்
முடி வெட்டிக்கொண்ட புல்வெளிகள்
மாலை எனை சந்திக்க மருதாணியிட்ட கையோடு
காலடி எடுத்து வைத்து வந்து சென்ற பின்பு
மீண்டும் கால் அடி உயரம் வளர்ந்து விட்டதாம் !

நின் மயில் விழிக்கு
அழகாக இல்லையேனும்
அடிமையாகவாது எனது கவிதைகளை
தோகையென வைத்துக்கொள் !

நின் விழிப்புன்னகைக்கும்
அதைச்சார்ந்த எனது பாக்களுக்கும்
வாரக்கடைசியோ மாதக்கடைசியோ
தெரியாத பெயர்தான் இன்னமும் !

கோடி முறைக்கு மேல்
நின் விழியதனை கவிதைகள் கவிதைக்குள்
நலம் விசாரித்து வருகின்றன்
கோடிக்கு ஒரு முறையேனும்
விழிகள் கவிதைகளை
நலம் கேட்குமென தவம் இருக்கின்றன !

நின் விழிகளால் எல்லா வித
இலக்கண குறிப்புகளையும்
கூட்டுக்குடும்பமென ஒரு கவிதைக்குள்
அடக்கி அடங்கி கிடக்கின்றன !

வானம் எனும் காகிதம் விரித்து
மேகம் கொண்டு நீர் தெளித்து
வானவில் தொட்டு கோலமிட்டு
நின் விழி மை தொட்டு கவிதை எழுதுகிறேன்
காகிதம் தீர்ந்துவிடும் போல
கவிதைகள் இன்னும் ஆரம்ப நிலையிலே !

# காத்திருக்கிறது

கவியாழினி



நீயும் நானும்
ஒன்றாய் அமர்ந்து
பேசிய சாய்வு
நாற்காலியும்

நாம் பாதம் பதித்து
ஓடிவிளையாடிய
கிளைபரப்பிய
மரங்களும்

நாம் பாதம்பதித்து
இணைந்து
வருவோமென

தரையில்
இலைகளை பரப்பி
கையில்
இரு ரோஜா
மலர்கள் கொண்டு

வரவேற்க
நம்பிக்கையோடு
காத்திருக்கிறது
நம் வரவிற்காய்..

# மாசில்லா அன்பு

Pandima

சிறு சாரலில் சிலிர்க்க
ரசித்து நடந்து போகிறேன்
அதி மழைக் கூடினாலும்
உடல் குளிர நடுங்கினாலும்
குடையோடு வந்து விடாதே
கூடவே வா விரும்புகிறேன்

கால் வலிக்க நடந்தாலும்
பட்டினியாய் கிடந்தாலும்
மயங்கியே விழுந்தாலும்
அறுசுவையில் சமைத்து
உணவோடு வந்து விடாதே
கவிதை தா எழுந்துவிடுவேன்

பள பளக்கும் உடை தேடி
பெரும் பொருளில் அணி வாங்கி
மயக்க வைக்கும் மாளிகையில்
மகிழ வைக்க கனவு காணாதே
சிறு மண் கீற்றுக் குடிசையில்
இறுக்கி உறங்க ஆசைப்படுகிறேன்

பாவமெனப் பெரிதாய் கலங்கி
பழி எது வருமோ என்றஞ்சி
குழம்பிப் போகாதே வழித்தப்பி
பிடித்து வந்த கூட்டுப் பறவையல்ல
மாசு தீண்டாத் தூய உறவதை
உனக்கு பரிசாக்கவே காத்திருக்கிறேன்

# வெள்ளை நிலா ஒன்று

கல்பனா பாரதி

கோள்கள் சுற்றுது
சூரியனை !
பூமியும் சுற்றுது
சூரியனை !
வெள்ளை நிலா ஒன்று
சுற்ற வந்தது பூமியை !
மகிழ்ச்சியில்
தன்னைத்தானே
சுற்றத் துவங்கியது பூமி !
அன்று முதல்
இரவும் பகலும்
இடைப்பட்ட மாலையும்
காதலும்
நமக்குக் கிடைத்தது
பூமியில் !

# பெண்ணொருத்தி புலம்புகிறாள்.....

கனகீஸ்



ஆத்து தண்ணீ ஊத்து தண்ணீ
அத்தனையும் வத்திருச்சே_
ஆனா நா வடிக்கும்
கண்ணீரு வத்தலையே.....

சொத்து சுகம் கேக்குலியே
சோறு தண்ணீ கேக்குலியே _
உன் ஒத்த சொல்லு
கேட்டிடவும் கூடுலியே......

ஊர நா நம்புலியே
என் உள்ளத்தையும் நம்புலியே
உன்னை தானே நம்பினேனே
உள்ளுக்குள்ளே இப்ப வெம்பினேனே.......

மண்ணுலையும் ஆசையில்லை அட
பொன்னுலயும் ஆசையில்லை
உன் ஆசைமுகம் பாத்திடத்தான்
ஆயுசுக்கும் ஆசைப்பட்டேன்.....

கண்ணுதான் பட்டுருச்சோ
கால நேரம் கெட்டிருச்சோ
உன் பொன்னு மனம் வாடிப்போக
நா பொலம்பி தவிக்கிறனே......

பொங்கி வச்ச சோறும்
புடிச்சு வச்ச நீரும்
என் தொண்டை நனைக்கிலியே
என்வயித்துக்கும் இப்போ பசிக்கலியே.......

ஆருனா ஆரிடுமா
அத்தனையும் மாறிடுமா?.....
யாரோ சொல்லிருந்தா
ஆருதலா நீயிருப்ப.....

நீயே சொன்னதால
நாதியத்து நானிருக்கேன்.....

வேலை செய்ய தோணிலியே
வேதனையை சொல்லிடவும் ஆளில்லையே _
மனம் புழுங்கி சாகுறனே
புத்தியின்றி வாடுரனே.......

மாலக் கருக்கலிலும்
அந்த மையிருட்டுவேளையிலும்
பேசிக் களித்த கதை
என் நெஞ்சுகுழி பொசுக்குதடா.....

உறவா நீயிருந்தா உதறி விட்டிருப்பேன்....
உசுரா நீயிருக்க உன்ன விட்டுபுட்டு
எப்படி நான் வாழ்ந்திடுவேன்?.........

அட சாட்சி தேவையில்லை
நீ தந்த சத்தியமும் மெய்யிலையோ...
பாலும் திரிஞ்சிருச்சோ
உன் பாசமும் மாறிடுச்சோ.....

உசுர உருக்கி நா
என் உள்மனச சொல்லிபுட்ட
காலம் கடத்தாத...
என் கனவை கலைக்காத....

ஓடி நீ வந்து விடு
ஒத்த சொல்லு பேசிவிடு
வாடி நா நிக்கிறனே
வந்து நீயும் சேர்ந்து விடு......

காலந்தான் மாறிடுமா _உன்
கனிவு மொழி கேட்டிடவும்....
நேரம் தான் விடிஞ்சிருமா _உன்
நேச முகம் பாத்திடத்தான்......

# அன்னிய மொழி மோகம்

கனகீஸ்




*வீதிக்கு வீதீ இருக்குதுங்க பள்ளிக்கூடம் தான்...*
*அட எங்கயும் கேக்கல எங்கயும் கேக்கல _*
*நம் தாய் மொழி கீதம் தான்...*

*அஞ்சு வயசுல பள்ளிக்குப் போனோம்...*
*அது நம் காலந்தான்... அட*
*அரக்கால் சட்டை போடத்தெரியலை*
*அவன் முதுகுல பாரந்தான்...*

*அம்மா, அப்பா சொல்லிய காலம்..*
*மாறிப் போயிடுச்சு... அட*
*மம்மி, டாடி சொல்லிடத்தானே*
*இப்ப மவுசும் கூடிடுச்சு...*

*வெள்ளைக் காரன் போட்டுக்கிட்டான்*
*கோட்டும், சூட்டும் தான்... அட*
*வெப்ப நாட்டிலும் நாம் ஏன் போடனும்*
*அந்த கோமாளி வேசம் தான்...?*

*கொள்ளை அடிக்கிறான் கொள்ளை அடிக்கிறான்*
*அந்த யுகேஜி படிப்புக்கும் தான்...*
*கூலி செஞ்சும் நாம ஏன் கொட்டிக் கொடுக்கனும்*
*எல்லாம் அன்னிய மோகம் தான்...*

*அட எதுதா இல்லை எதுதா இல்லை*
*நம் தமிழ்வழிக் கல்வியில?...*
*நாம ஏன் சேர்க்கனும் நாம ஏன் சேர்க்கனும்*
*அயல்மொழிப் பள்ளியில?....*

*குழந்தைங்க என்ன குத்தமா செஞ்சுது?*
*எதுக்குங்க சிறைவாசம்?... நாலு*
*செவுத்துக்கு மத்தியில் அடஞ்சி*
*கிடக்கும் அடிமை மொழி நேசம்?....*

*அட எப்பங்க குறையும் எப்பங்க குறையும்*
*உங்க அன்னிய மொழிப் பாசம்?...*
*இன்னும் எதுவரை போகுமோ எதுவரை போகுமோ?*
*உங்க ஆங்கில இன மோகம்?.......*




**" மின் இதழை படித்து இரசித்தமைக்கு நன்றிகள் "**

தங்கள் பதிவுகள் மின் இதழை சிறப்பிக்க வேண்டுமா? தங்கள் பதிவுகளும் மின் இதழில் பங்கு பெற்று சிறப்பிக்க நாங்கள் விரும்புகிறோம்.

1. தளத்தில் சிறப்புப்பதிவாக தெரிவு செய்யப்படும் படி சிறந்த கருத்தை வைத்து பதிவுகளை எழுதுங்கள்
2. அதிக புள்ளிகள் பெற்று முதல் இருபது பதிவுகளுக்குள் தங்கள் பதிவுகள் வருமாறு சிறந்த கருத்துகள் கொண்ட பதிவு செய்யுங்கள்.
3. வேறு இடங்களில் பதியப்படாத பதிவுகளுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

மீண்டும் வழக்கம் போல அடுத்த மின் இதழில் சந்திப்போம்.

இதழையும் தமிழ் நண்பர்களையும் பற்றிய தங்கள் கருத்துகளை தயவு செய்து info@tamilnanbargal.com என்ற முகவரிக்கு அனுப்பி வைக்கவும்.

நன்றிகள்
தமிழ் நண்பர்கள்
tamilnanbargal.com